*Ūḻiyaṉ*

*Malar 9, itaḻ 41*

*July 02, 1929*

Record no. 148

சென்னைப் பதிவு எண் கருoக          கசு-பக்கங்கள்.          தந்தி விலாசம்:—"ஊழியன்"

சந்தா விபரம்.
வருடச் சந்தா ... ரு—0—0
ஆறுமாதச் சந்தா ... ௩—0—0
வெளிநாடு வருடச்சந்தா ... ௬—0—0

# ஊழியன்

## The "Oolian," a Nationalist Weekly.

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்

நல்லவை வாழ்க!          அல்லவை ஆழ்க!!

மலர், கூ. } காரைக்குடி, சுக்கில-ஞு ஆனி-மீ கக-உ செவ்வாய்க்கிழமை. { இதழ், சுக

## மலர் மணம்.

### அந்தரங்கம்.

(தி. ஜ. ர.)

ஒரு சொல்லால், அல்லது ஒரு வாக்கியத்தால், மேலான, அசைக்க முடியாததோர் தத்துவத்தைக் கூறிவிட முடியாது. மொழி அவ்வளவு குறைவுடையதாயிருக்கிறது. வாழ்வின் மர்மம் கருத்தை மயக்குகிறது. கருத்தை வெளியிடும் கருவியான மொழியோ, பக்குவம் உடையதாக ஆவதில்லை; ஆக மாட்டேனென்கிறது. மனிதன் வளர்ந்தால், கருத்துப் பெருகுகிறது. அது பெருகப் பெருக, மொழி குட்டையும் கிழிந்ததுமான சட்டையாகிவிடுகிறது. அந்தச் சட்டையைப் பழுது பார்ப்பதற்குள், சிந்தனை நிறைவு மூச்சுத் திணறிவிடுகிறது. என்ன அதிசயம்!

*          *          *

"இரகசியம் ஒரு பாவம்" என்று சொல்லப்படுகிறது. இரகசியத்தைப் பாவமாக்கினால், புண்ணியமான "அந்தரங்க"மாவது வேண்டியிருக்கிறது. "காமம்" பாவமானால், "காதல்" வேண்டியிருக்கிறது. விஷயத்தில் யோசனையில்லாவிட்டால், சொல்லில் யோசனை. "காமம்" என்ற சொல் பொருத்தமா, "காதல்" என்ற சொல்லா? "இரகசியம்" என்ற சொல் ஏற்றதா, "அந்தரங்கம்" என்ற சொல்லா? "காமம்" என்ற சொல் "இன்பம்" என்ற பொருளில் வழங்கிய காலம் ஒடிவிட்டது. "இரகசியம்" என்ற சொல்லுக்கு இப்பொழுது ஆபத்து வந்திருக்கிறது. தமிழிலே "இரகசியம்" மேலான பொருளில் உபயோகிக்கப்பட்ட காலம் இருந்தது. "இரகசியத்"திற்குக் கொஞ்சம் ஆபத்து வந்திருப்பதால், "அந்தரங்க"த்தைக் கொஞ்சம் நாம் கைதூக்கிவிடலாகாதா?

*          *          *

இரகசியத்திற்கு ஒரு பகட்டு உண்டு; அந்தரங்கத்திற்கு ஒரு சக்தியுண்டு. "காம"த்திற்குத் தோழனாக, "இரகசிய"த்தை நீங்கள் இணைத்து வைப்பீர்களானால், "காத"லுக்கு "அந்தரங்கத்தின் தோழமை வேண்டியிருப்பதை நீங்கள் மறக்க முடியாது. எல்லாம் இரகசியமாய், எல்லா இரகசியமும் பாவமுமாய் விடுமானால், காமமும் பாவம், காதலும் பாவமாகிவிடும். காமம் தனது இழிவை மறைக்க இரகசியத்தைத் துணைக் கொள்ளுகிறது. காதல் தனது சக்தியையும், மதிப்பையும் பெருக்கிக் கொள்ள, அந்தரங்கத்தைத் துணைக் கொள்ளுகிறது.

*          *          *

"இந்தப் பிரம்மானந்தமான தோட்டத்திலே உள்ள பல மரஞ் செடி கொடிகளின் பலனையும் அனுபவிக்கலாம். ஆனால், நன்மை தீமையை யறியும் இந்த மரத்தின் கனியை மட்டில் பறித்துத் தின்னாதே" என்று, ஆதி மனிதனான ஆதாமுக்கு விவிலிய வேதக் கடவுள் பணித்தார். இது வோர் உருசிகரமான கதை. மனிதன் ஆதியிலே இயற்கையோடு இயற்கையாய் அமிழ்ந்து, இன்பத்தையும் துன்பத்தையும், புண்ணியத்தையும் பாவத்தையும் உணராதவனாகவிருந்தான். அவனது பகுத்தறிவு பரவசமாய், அகங்காரமற்று உறங்கிக்கிடந்தது. அவனது நிலை கனவு நிலை. அந்தக் கனவுத் திரையைக் கிழித்தெறிய அவனுக்கு ஆர்வமுண்டாயிற்று.

*          *          *

கடவுளின்—இயற்கைத் தெய்வத்தின்—அந்த அந்தரங்கக்கனி அவன் முன்னே பளபளப்புடன் ஒளி செய்தது. அதைப்பறித்து அருந்தினான். திரை வீழ்ந்து விட்டது. அந்த ஆனந்தமான அறியாமையின் இன்பம் தொலைந்தது. ஒன்றைப் பாவம் என்றான்; மற்றொன்றைப் புண்ணியம் என்றான், இயற்கையின் சட்டத்தைக் கண்டே அவன் வெட்கப்படலானான். கடவுளின் அந்தரங்கத்தை அறுத்துத் தள்ளினான். ஆனால், தனக்குப் பல அந்தரங்கங்களைச் சமைத்துக் கொண்டான்.

*          *          *

ஆதி மனிதன் அந்த அந்தரங்கத்தை ஏன் அம்பலம் செய்ய முயன்றான்? அந்தரங்கத்துக்கே ஓர் கவர்ச்சி உண்டு. வியப்பு, அறியாமையின் மகளாம். அந்தரங்கம் வியப்பின் தாய். வியப்பிலே, ஓர் ஆனந்தம் உண்டு. ஆனால், ஓர் வேட்கையுமுண்டு. அந்தரங்கக் கனி நமது கைக்கெட்டாதவரையில் வியப்போம்; இன்பத்தை நாம் அனுபவிப்போம். அந்தரங்கம் வெளிப்பட்டதும், நமது வேட்கை பூர்த்தியாகிவிட்டது; ஆனால், ஆனந்தம் போய்விட்டது!

*          *          *

பலருமறிந்த பொருள்கள் பல, அந்தரங்கமாகவே வைக்கப்படுகின்றன. பலருமறியக்கூடிய சங்கதிகள் பல அந்தரங்கமாகவே இருந்துவிடுகின்றன. காதல காதலிகளின் அந்தரங்க சல்லாபம் அவர்களது இன்பத்தைப் பெருக்குகின்றது. அதற்கு நயமுண்டு; மதிப்புண்டு; பெருமையுண்டு. காதல காதலிகளின் ஆர்வச் செயல்கள் தீமையற்றவை தானே; அவை பாவமானவையல்லவே? அங்ஙனமாயினும், அவற்றிற்கு அந்தரங்கம் வேண்டியிருக்கிறது. மறைவிலே நடப்பதெல்லாம் பாவமல்ல; பகிரங்கமாய் நடப்பதெல்லாம் புண்ணியமுமல்ல.

*          *          *

சில விடத்திலே அந்தரங்கம் அவசியமாயிருக்கின்றது. சில விடங்களிலே பகிரங்கம் அவசியமாயிருக்கின்றது. அந்தரங்கத்தின் உதவி பலவற்றில் நல்ல பயன் தருகின்றது. நாடகமேடையிலே, திரை தொங்குகின்றது. திரைக்குப் பின்னே நடப்பனவெல்லாம், அதற்கு முன்னே நடக்கலாமா? நடக்குமாயின், அந்தக் கலையின் சுவை போய்விடும். அரிதாரத்தை நமது கண்ணுக்கு முன்னே ஒருவன் பூசிக்கொண்டால், நமக்கு அருவருப்புத்தான் உண்டாகும். ஆனால், அவன் மன்னவனாய் நம் முன்வந்து நிற்கவேண்டும்.

*          *          *

செப்படு வித்தைக்காரன் மாஞ்செடி முளைக்க வைக்கு முன்னதாகவே, அவனுடைய பையிலிருக்கும் மாங்கொத்தை நம்மிடம் காட்டிவிடுவானாயின், நமது வியப்பை நாம் இழந்துவிடுவோம்; அவன் வித்தை காட்டவும் முடியாது. அந்தப் பையிடம் அவன் கை போகும்பொழுதெல்லாம், நம் கண் திறந்தவண்ணமிருக்கும். அவன் நம்மை ஏமாற்றுவதிலே, நமக்கு ஒரு ஆனந்தம். நமது கவனத்தை வேறிடம் தள்ளிவிட்டு, அதனை அவன் எடுத்துவிடுகிறான். ஆனால், முன் எச்சரிக்கை கூடாது. நாம் எதிர்பாராதிருக்கும்பொழுது, அது நம் கண்முன் தோன்றச் செய்கிறான். அவனது "மூடுமந்திரம்" நமக்கு ஒரு களிப்பு.

பத்திராதிபர் ஒருவரிடம், கட்டுரையாளர் தமது பெயரைத் தெரிவியாதிருத்தல், பத்திரிகைத் தர்மத்திற்கு உற்றதல்ல; கட்டுரையாளரும் இரகசியம் செய்யும் குற்றம் சாற்றப்படுவார். ஆனால், அவரைத் திரைக்குப் பின்னால் வைத்துவிட்டு, அவரது கருத்துக்களை ஜனங்களின் கண்களுக்கு முன்னே பத்திராதிபர் தூற்றுவது தவறல்ல; இது பத்திரிகை தர்மத்துக்கு முரணல்ல. ஏன் அப்படி? அந்தக் கருத்துக்களின் லாப நஷ்டங்களுக்குப் பத்திராதிபர் பொறுப்பைத் தாங்கிக் கொண்டுவிடுகிறார். பத்திராசிரியருக்கு நம்பிக்கையான தகவல் வேண்டியிருக்கின்றது; கட்டுரையாளருக்குப் பாதுகாப்பு வேண்டியிருக்கிறது; ஜனங்களுக்கு விஷயம் வேண்டியிருக்கிறது. இவை மூன்றுக்கும் இந்த அந்தரங்கத்தால் பாதகம் நேரவில்லை.

*          *          *

விஞ்ஞானக் கலைகளிலே ஆராய்ச்சித் திறமை வாய்ந்தவர்கள், அவற்றை அந்தரங்கத்திலே செய்கிறார்கள். ஏன் அவ்வாறு செய்யவேண்டும்? எந்தச் சோதனையும் முடிவானதல்ல; ஆனால், முடிவை நோக்கியே. சோதனை தவறிப்போகலாம்; வெற்றியும் பெறலாம். ஆகாயத்திலே பறக்க, ஆரம்ப முயற்சிகள் நடந்தன. ஒருவர் இறக்கைபோன்ற ஒன்றைக் கட்டிக்கொண்டு கூரையினின்றும் குதித்துப் பார்த்தாராம், அது வெற்றிபெறவில்லை. அந்தக் கதையை நாம் இன்று கேட்டு நகைப்போம். ஆனால், அந்தச் செயல் நடக்கும்பொழுது, நாம் நேரிலிருந்து நகைப்போமானால், அந்த மனிதன் செத்துப்போனான்... ஆராய்ச்சி பூர்வத்தை நாம் கொலை செய்துவிடுவோம். உயர்ந்த முயற்சியும் பகிரங்கத் தோல்வியும் கலந்தால், தற்கொலைத் தீங்கு உண்டாகிவிடக்கூடும். நல்ல பயன் பகிரங்கமாகலாம்; நல்ல சோதனை பகிரங்கமாதல் தீமை பயக்கக்கூடும்.

*          *          *

ஆர்வத்தையும், பாதுகாப்பையும், மதிப்பையும், சுவையையும் பெருக்கத்தக்க சங்கதிகளிலே, அந்தரங்கம் பாவமல்ல. காணும் பிரபஞ்சம், அந்தரங்கத்தைத் துணைக் கொண்டிருக்கிறது. வேதாந்திகள் அதனை மாயை என்பார்கள். மாயை, பிரபஞ்ச வாழ்வுக்குச் சுவையளிக்கிறது. கலைஞர்கள், ஒரு திரையைச் சுருட்டுகிறார்கள். அதற்குப் பின்னே இன்னோர் திரை அசைந்து ஆடுகிறது. அந்தத் திரை [illegible] இல்லாவிட்டால், வாழ்வில் வியப்பேது, சுவையேது, ஆர்வமேது, தூண்டுதலேது?

சென்ற வெள்ளிக்கிழமை இரவு மணி பத்துக்கு காரைமாநகரச் சிவன் கோவிலில் சூரிய புஷ்கரணி எனும் திரு நாமம் படைத்த தடாகத்தின் கரையில் கொசுமகாஜனங்கள் பெருந்திரளாகக் கூடியிருந்தார்கள். அக்கூட்டத்தில் பலர் ஒன்று சேர்ந்து தங்களுக்கு இயல்பாக அமைந்துள்ள இன்னிசையோடு பாடினார்கள். சிலர் தாளங்கள் போட்டுக் கூத்தாடினர். வேறு பலர் பெருந்திரளாக அவ்வீதிவழியே செல்லும் மக்களை உபசரிக்க விரும்பி அவர்கள் உடலிற் சென்று மொய்த்தனர்! மொய்த்து அங்கள் ஊசிபோன்ற கொடுக்குகளால் 'இன்ஜெக்ட்' செய்வதுபோல் வந்தவர் மேனியில் கடித்தார்கள். வந்தவர்களை உபசரிக்க ஒவ்வொரு நாட்டினரும் ஒவ்வொரு வகுப்பினரும் ஒவ்வொரு முறையினைக் கையாளுகிறார்களல்லவா? சிலர் வந்தவர்கட்கு வெத்திலை பாக்குக் கொடுக்கின்றார்கள். சிலர் கலர் சோடா கொடுத்து உபசரிக்கின்றார்கள். ஆனால் இந்த கொசு சமூகத்தார் உபசரிக்கும் முறை இதுதான்!

இவ்வாறு அவர்கள் செய்த உபசாரம் எனக்குச் சிறிது வருத்தமாகவே இருந்த போதிலும் பொறுத்துக்கொண்டு அவர்கள் ஏன் கூடியிருக்கிறார்கள், என்ன செய்கின்றார்கள் என்பவற்றை அங்கு நின்று சிறிது கவனித்தேன். அப்போது நான் கண்டவற்றையும் கேட்டவற்றைச் சுருக்கமாக பொது மக்கள் அறியும்பொருட்டு இங்கு எழுதுகிறேன்.

அக்கூட்டத்திற்கும் அவ் வகுப்பிற்கும் தலைவராகிய கொசுவனார் நான் அங்கு சென்ற சிறிது நேரத்திற்குள் தோன்றினர். அப்போது அக்கொசுக் கூட்டங்கள் செய்த ஆரவாரங்கட்கும் மேளதாள கோஷங்கட்கும் அளவே இல்லை! தங்கள் ஆரவாரத்தை நிறுத்தும்படியாக எவ்வளவோ முயன்று கொசுவனார் தமது கையைக் காட்டினும் எவரும் கேட்பதாகத் தெரியவில்லை. எனினும் அவ்விரைச்சலைக்கவனியாது கொசுவனார் சில உரைகள் பகர்ந்தார். அது வருமாறு:—

# கொசுவனார் குதூகலம்!

## (க) கடவுள் வழிபாடு!

(குட்டிக் குறும்பன்.)

என் அருமைச் சோதரர்களே!

நாம் ஏன் இன்று பெரும் திரளாகக்கூடி இருக்கிறோம் என்பது நீங்கள் யாவரும் அறிந்ததே. நாம் நீண்டகாலமாக இந்த ஊருணியில் நமது உற்றார் உறவினரோடு வதிந்து வருகிறோம். நமக்கு சர்வ ஜீவ தயாபரனாகிய சிவபெருமான் நமது வம்சம் வாழையடி வாழையாக ஒன்று பத்து நூறு ஆயிரம், லட்சம், கோடி என்று பெருக அருள் புரிந்திருக்கின்றார். நம்மை ஒழிக்கவேண்டும் என்ற நோக்கத்தோடு இத் தென் நாட்டின் பல பாகங்களிலும் சிலர் சுகாதார சங்கங்கள் பல ஏற்படுத்தியும் அவர்கள் முயற்சி பாழாயின. இதன் காரணமென்ன? நமது நாட்டு சானிட்டரி இலாகா அதிகாரிகள், நகர சபையார்கள், முதலியோர் நம்மிடத்தும் நமக்கு பலவகையானும் உதவிபுரிந்துவருகின்ற பன்றி மகா ஜனங்கள், நோய்ப்புழு வகுப்பினர் முதலியோரிடத்தும் பெரும் அனுதாபமும் சிவகாருண்யமும் கொண்டிருப்பதால் அல்லவா? இதற்கு நாம் நமது நன்றியறிதலை அறிவிக்க வேண்டாமா? இந்தியச் சக்கிரவர்த்தியாகிய ஜார்ஜ் மன்னர் சுக முற்றதற்கு பிரிட்டிஷ் அரசாங்கத்தில் உட்பட்ட இடங்களிலுள்ள ஆலயங்கள் யாவற்றிலும் பிரார்த்தனை செய்ய வேண்டுமென்று தீர்மானமாக அவ்வாறே நடைபெற்றுவருகின்றது. கிருஸ்து சமயத்தைச் சார்ந்த சக்கிரவர்த்தி, உடல் நலன் பெற்றதற்காக நமது சிவன் கோவில்களிலும் அம்மன் கோவில்களிலும் அர்ச்சனை ஆராதனை முதலியவை நடாத்தப்படுகின்றன. அங்ஙனமாக, நமது குலம் அழிந்துவிடாது காப்பாற்றியதோடு நமது வம்சம் ஆயிரம், பதினாயிரம், லட்சம் கோடியாக வளர்ந்தோங்கவும் அனுக்கிரகித்ததற்காக சிவபெருமானது திவ்ய சூரிய புஷ்கரணி என்னும் இத்திவ்ய தீரத்தத்தில்வதியும் நாம் அச்சிவபெருமானுக்கு நமது மனமார்ந்த நன்றியறிதலை அறிவிக்க வேண்டுமல்லவா? (ஆம். ஆம் என்ற ஆரவாரம்.)

நமது பிரார்த்தனைகள், ஆராதனைகள் முதலியவற்றைச் செலுத்தவே இந்த கூடியிருக்கின்றோம். எனினும், சாதாரண மக்களைப் போன்ற அபிஷேகம், ஆராதனை, அர்ச்சனை முதலியன நாம் நடத்துதல் ஆகாது. அது நமக்குத் தகுந்ததுமல்ல. கோவில் பட்டர்களையும், பிராமணர்களையும் விட நாம் உயர்ந்தவர்கள் என்பதை நீங்கள் மறந்துவிடலாகாது! கோவிலுக்குள் பார்ப்பனருக்கு ஓர் இடம் பார்ப்பனரல்லாதாருக்கு ஓர் இடம் என்று ஒதுக்கப்பட்டிருக்கிறது. ஆனால் பிராமணருக்கு அல்லாதாரைவிட சுவாமியின் பக்கத்தில் போகும் உரிமை இருப்பினும், மூலஸ்தானத்திற்குள் போகும் உரிமையில்லை. இது அந்த கோவில் பட்டருக்குத் தான் இருக்கிறது! ஆனால், நமக்கு இருக்கும் உரிமையைக் கவனித்துப் பாருங்கள். இத்திவ்ய புஷ்கரணியிலிருந்து நமது உறைவிடமாகிய, இப்பரிசுத்த தீர்த்தத்தை மொண்டு கொண்டு போகும் போது நம்மையும் அத்துடன் அழைத்துச் செல்லுகிறார்கள்! எங்கே செல்லுகிறார்கள்? நேராக மூல ஸ்தானத்திற்குத்தான்! அங்கு பால், தேன், தயிர் முதலியவற்றோடு கலந்து நம்மை கடவுள் தலையில் அபிஷேகம் பண்ணுகிறார்கள். ஆதலால் நாம் கடவுளுக்கு மிகச் சமீபமாகச் சென்று அவரை நேராகத் தொட்டு வணங்கும் உரிமை பெற்றிருக்கிறோம்! எனவே, நாம் இவர்கள் யாவரையும்விட உயர்ந்த வகுப்பினர்கள் என்பது ஞாபகத்தில் இருக்கட்டும். நாம் அப்பார்ப்பனர்கட்குக் கீழ்படிந்து அவர்களை நமக்கும் கடவுளுக்கும் இடையேயுள்ள தரகர்களாக்கவேண்டாம். (ஒரு நாளும் செய்ய மாட்டோம்) நாமே நமது ஆராதனை அபிஷேகம் முதலியவற்றைச் செய்யவேண்டும் என்பதற்கே இதனைக் கூறினேன்.

ஆனால், நீங்கள் பார்ப்பனர்களோடு மட்டும் பகைமை கொள்ளவேண்டாம். சில வகைகளில் நாமும் அவர்களும் ஒரே தன்மையர்களாக விருக்கின்றோம். அவர்கள் உதவி நமக்கும் தேவையாக விருக்கின்றது. பார்ப்பனரல்லாத மக்களும் சுயமரியாதைக் காரர்கள் என்று சொல்லிக்கொள்ளுவோர்களும் எவ்வளவு கூச்சலிட்டும், இவ் வதப்பார் பலமும் ஆட்சியும், செல்வாக்கும்நாடோறும்அதிகரித்தே வருகிறது.(உண்மைஉண்மை) ஆகலால்அவர்கள்ஆதரவு இருந்தால்தான் நாம் நீடித்துவாழ முடியும்.இத்தஊருணியைப்பாருங்கள். 'சுகாதாரம், சுகாதாரம்' என்று கூச்சலிடுவோர் பலர் 'மிக அசுத்தமாக விருக்கிறது; நோய்ப்புழுக்கள் கோடா கோடியாகவும், கொசுக் கூட்டங்கள் கோடிக் கணக்காகவும் இருக்கின்றன; இது மிக அசுத்தமான தண்ணீர்' என்கிறார்கள். இதில் நாள்தவறாது ஸ்நானம் செய்பவர்கள் யார்? அந்த பிராமணோத்தமர்களும் அவர்கள் பெண்மக்களும்தானே! பிறவகுப்பினரும் குளிப்பதாகச் சிலர்சொல்லலாம். ஆனால் அவர்கள் இவ்வளவு ஒழுங்காக தினந்தோறும் இங்குவந்து குளிப்பதி

(ரு-பக்கம் பார்க்க.)







# லாலாஜீயின் சரித்திரம்.

## தொண்டின் துவக்கம்,

லாலா லஜபதிராயின் தற்சரிதம் "பீபிள்" பத்திரிகையில் வெளியாகிவருகிறது. அதன் சில பகுதிகள் முன்னர் "ஊழிய"னில் வெளியாகியிருக்கின்றன. தொடர்ச்சி வருமாறு:—

### பரிட்சை தேறவில்லை.

தயானந்தரது மரணத்தால் உண்டான பெருந்துக்கத்தால், நான் கலங்கிப்போனேன். ஆதலால், சட்டப் புத்தகங்களை மேலேபடித்துச் செல்ல, எனக்கு மன அமைதி இல்லை. மேலும், அந்த ஆண்டில், பரிட்சை மிகவும் கடுமையாகவிருந்தது. சுகூ மாணவர்களில் கு பேர்தான் தேறினார்கள். ஆரியசமாஜம் என் மனத்தே பிரதான ஸ்தானம் பெற்றது. கஅஅசு-ம் ஆண்டில், ஜாக்ரேயனிலிருந்து ரோஹ்டாக் என்னுமிடத்திற்கு, நான் சென்றேன். அக்காலத்தில், அங்கு எனது தந்தை ஓர் உபாத்தியாயராக விருந்தார். எனது ஜீவனத்திற்கான அலுவலைச் செய்த பின்னர், வக்கீல் பரிட்சைக்குத் தயாராவதில் சிறிது நேரத்தைச் செலவழித்தேன். இதோடு, அவ்விடத்திய ஆரிய சமாஜத்தின் காரியங்களில் கூர்ந்த ஊக்கம் எடுத்துக்கொண்டேன். அதற்கு நான் காரியதரிசியானேன். நான் ரோஹ்டாக்குக்குச் சென்றபொழுதே, சமாஜம் அங்கு இருந்தது. ஆனால், அதன் நிலைமை வருந்தத்தக்கதா யிருந்தது. மறுபடியும், மூன்று மார்க்குகள் (அம்சங்கள்) குறைந்துபோனதால், பரிட்சையில் தேறத் தவறினேன். அந்தக் காலத்தில், ஒவ்வொரு வினாப் பத்திரத்திலும் நூற்றுக்கு அறுபது மார்க்கும், சராசரியில் நூற்றுக்கு சுசு மார்க்கும் வாங்கவேண்டியதாயிருந்தது. சுகூ மாணவரில், சுo பேர் தேறியதாக வெளியிடப்பெற்றது. எனது தோல்வி, எனக்கு மிகுந்த வருத்தத்தை உண்டாக்கிற்று. ஏனெனில், நான் ஓர் முக்தாராயிருந்தும் தேறாமற்போனது என்னால் சகிக்க முடியவில்லை. ஆனால், இந்தத் தடவையில் ஆரிய சமாஜ வேலையை நான் அசிரத்தை செய்யவேயில்லை.

### நிதி சேர்த்தது.

கஅஅரு-ம் ஆண்டில் லாகூர் தயானந்தர் வேதக் கல்லூரிக்கு ரோஹ்டாக்கில் கொஞ்சம் நிதி சேர்த்ததுடன், டிசம்பர் மாதம் மறுபடியும் வக்கீல் பரிட்சைக்கு ஆஜரானேன். இப்பொழுதும் பரிட்சை மிக்க கடுமையாயிருந்தது. தவிரவும், ரெஜிஸ்டிராருக்கு மாணவர்கள் லஞ்சம் கொடுத்தாலல்லாமல் அவர்களை அவர்தேறவிடுவதில்லையென்ற வதந்தியும் வழங்கியது. தயானந்தர் வேதக்கல்லூரியை நிறுவும் யோசனை கஅஅரு-ம் ஆண்டில் தோன்றியது. கமிட்டிக் கூட்டங்கள், ஏனைய கூட்டங்கள் ஆகிய எல்லாவற்றிற்கும் ஆஜராக, நான் லாகூருக்குச் செல்வது வழக்கம். கஅஅசு-அரு-ம் ஆண்டுகளில் கல்லூரிக்கு நிதிகள் வசூலிக்கப்பட்டன. கஅஅரு-ம் ஆண்டு டிசம்பரிலும் கஅஅசு-ம் ஆண்டு ஜனவரியிலும் எல். ஹன்ஸ் ராஜையும் பண்டித குருதத்தரையும் நான் அடிக்கடி பார்த்துவந்தேன். நாங்கள் சந்தித்தபோதெல்லாம், சமாஜத்தைப்பற்றியும் கல்லூரியைப்பற்றியும்சம்பாஷித்தோம். நாட்டினிடமும் நாட்டவரிடமும் எங்கட்குள்ள அன்புக்கு, இவ்விரண்டையும் மூல ஸ்தானங்களாக ஆக்கிவிடவேண்டு மென்பது எங்கள் விருப்பம்.

### புதிய யோசனை.

கல்லூரியின் கலாசாலை இலாக்காவில் நானும் எல். ஹன்ஸ்ராஜும் வேலைபார்க்க ஒப்புக்கொள்ளுவதென்றும், எல். ஹன்ஸ்ராஜ் தலைமை உபாத்தியாயராயிருப்பதென்றும் நான் இரண்டாம் ஆசிரியராயிருப்பதென்றும், ஒருமுறை அவரும் நானும் திட்டம் போட்டோம். ஆனால், ஒரேவொரு விஷயத்தால் தயக்கமுண்டாயிற்று. எல். ஹன்ஸ்ராஜ் "கிராஜுவேட்" பட்டம் பெற்றவர்; நான் தேறிய பரிட்சையெல்லாங் கூடிப் பிரவேசப்பரிட்சை மட்டிலுமே. எனது சேவை பெரிதும் மதிக்கப்படாது போகலாம். முக்தாராகத் தொழில் புரிந்ததன்மூலமே நான மாதமொன்றுக்கு உoo ரூபாய் சம்பாதித்து வந்தேன்; நல்ல அந்தஸ்தும் பெற்றிருந்தேன். ஆனால், எனதளவு கல்வியும் திறமையும் வாய்ந்த ஒரு உபாத்தியாயர் ஒரு வேலை மாதம் முப்பது ரூபாய்க்கு அகப்படலாம். ஆதலால், கலாசாலையில் நான் வேலை செய்வதாய் முன் வருவது, அநேக காரணங்களால் பாராட்டப்படாது போகலாம். ஆனால், முக்தார் தொழிலில் எனக்கு வெறுப்பு மிகுந்துவிட்டது. சமாஜத்திற்கு உழைக்க வேண்டுமென்று ஆசை மிகுந்திருந்தது. ஆதலால் எவ்விதமாயினும் சரி, மறுபடியும் முக்தார்த் தொழிலுக்குச் செல்லாது தப்பிக்க விரும்பினேன்.

### இரவும் பகலும் கண்ணீர்.

இன்னொரு சங்கடம். எல். ஹன்ஸ்ராஜின் சொந்தத் தேவைகளுக்கு அவர் தமது சகோதரரைச் சார்ந்திருக்கலாம். எனக்கோ எவரும் ஆதரவில்லை. இதற்கு மாறாக, எனது கல்வியின் பொருட்டாகப் பெருங் கஷ்டங்களை அனுபவித்த எனது பெற்றோர், இப்பொழுது நான் தங்களுக்கு உதவி செய்வேனென்றும், எனது இளைய சகோதரர்களைப் படிக்கவைப்பேனென்றும் எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். இந்த யோசனைகள் எனக்குப் பெருந் தொல்லையளித்தன; இரவும் பகலும் நான் அழுது கொண்டிருந்தேன். ஒரு சமயம், குருதத்தர் என்னை இந்த நிலையில் பார்த்துவிட்டார். மிகுந்த அன்புடன், என்னைக் கண்டித்தார். ஒரு பள்ளிக்கூட உபாத்தியாயராகவிருக்க, என் தலைவிதியில்லை. குருதத்தருடைய புத்திமதியின்மேல், உoo ரூபாய் செலவழித்தேன்; சட்டப் பரிட்சையில் தேறிவிட்டேன். இதனால், எனது திட்டங்கள் மாறுதலடைந்தன. சமாஜத்தில் நான் நேரே வேலை பார்ப்பதைவிட, வக்கீல் தொழிலமர்ந்து, பணத்தின் மூலம் சமாஜத்திற்கு உதவி செய்தல் மேலாகும் என்று குருதத்தரும் ஹன்ஸ் ராஜும் நானும் ஒரே விதமாக அபிப்பிராயப்பட்டோம்.

### வீட்டுப்படிப்பு.

ஹிஸ்ஸாரில் ஆறு ஆண்டுகள் இருந்தேன். எனது கல்வியில் இருந்த இடைவெளிகளை நிரப்பிக்கொள்ள, இந்தக்காலத்தில் முயன்றேன். பொது இலக்கியங்களைத்தவிர, சமுதாய விஷயங்கள், அரசியல் விஷயங்கள், மத விஷயங்கள் ஆகியவை பற்றிய அநேகம் புத்தகங்களையும் படித்தேன். சமஸ்கிருதம் கற்றுக்கொள்ள, அநேக முயற்சிகள் செய்தேன். ஆனால், வெற்றி பெறவில்லை. ஏனெனில், சமஸ்கிருதத்தை போன்ற, ஓர் கடின மொழியைக் கற்க, அதிலேயே கருத்தைச் செலுத்தி உழைக்கவேண்டும். எனது தொழில் சம்பந்தமான உழைப்பால் ஆயாசமுற்றேனதலால், இது இயலவில்லை.

### வக்கீல் தொழில்.

எனது வருமானத்தைக் கொண்டோ அல்லது எனது உழைப்பைக்கொண்டோ தீர்மானித்தால், அவ்விடத்திய வக்கீல்களுள் தலைமையாக விருந்த மூவருள் ஒருவனாயிருந்தேன். ஹிஸ்ஸாரில், எனது வருமானம் ஆண்டு ஒன்றுக்கு ரூ கஎ,000 வரையில் உயர்ந்தது. என் ஞாபகத்திற்கெட்டிய மட்டில், அது ஒரு பொழுதும் சo,000 ரூபாய்க்குக் குறைந்ததேயில்லை. நிதானமாகத் திட்டம் போட்டால் ஆறு ஆண்டுகளில் எo அல்லது அo ஆயிரம் ரூபாய் (அதற்குமேலுமிருக்கலாம்) நான் சம்பாதித்தேன். பணம் வர ஆரம்பித்ததும், முதன் முதலாக நான் செய்த காரியம், எனது தந்தையை அவரது உத்தியோகத்தினின்றும் விடுவித்ததாகும். நான் எனது வக்கீல் வாழ்க்கையைத் தொடங்கிய முதல் ஆண்டிலேயே, என் தந்தை உபகாரச் சம்பளம் பெறுவோராகிவிட்டார். வட்டியைக் கொண்டு அவர் தமது ஆயுள் முழுதும் சௌக்கியமாக வாழக் கூடியதும் தமது ஏனைய குழந்தைகளை வளர்க்கக்கூடியதுமான ஓர் கணிசமான தொகையை அவருக்கு நான் அளித்தேன். இது வெறும் முன்னெச்சரிக்கையேயாகும். ஏனெனில், அந்த வட்டியைக்கூட அவர் செலவழிக்க வேண்டியிராது செய்வதற்காக, குடும்பச் செலவுகள் யாவற்றையும், கல்யாணம் முதலிய செலவுகளையும், எனது சகோதரர்களின் படிப்புச் செலவுகளையும் நானே பொறுத்துக்கொண்டேன். எனது வருமானத்தில், பத்திலொரு பகுதியை ஒழுங்காகத் தேசிய வேலைக்குச் செலவழித்து வந்தேன். சமாஜ வேலை சம்பந்தமாக, நான் அடிக்கடி வெளியில் சென்று, கூட்டங்களில் சொற்பொழிவாற்றி, நிதி சேர்த்ததுடன், சமாஜத் தலைவர்களால் என்னிடம் ஒப்படைக்கப்பட்ட பிறவேலைகளையுமியற்றி வந்தேன். மேலும், பத்திரிகைகளுக்கு விஷயங்கள் எழுதிவந்ததுடன், அரசியல் விவகாரங்களில் சிரத்தை யெடுத்துக்கொண்டேன். உருசிகரமான வாசிக்கும் வேலையில், அந்த ஜில்லாவில் ஓர் ஆங்கிலக் குமாஸ்தாவான (இங்கிலீஷ் கிளார்க்) மீர் முகம்மது உசேன் என்ற ஓர் முஸல்மான் எனது தோழராகவிருந்தார். நான் ஹிஸ்ஸாரில் எவ்வளவு காலமிருந்தேனோ அவ்வளவு காலமும், நாங்கள் நெருங்கிய நேசமுடையவர்களாயிருந்தோம். அநேகந் தடவை, நான் அவர் மனையில் உணவு கொண்டேன்; என் மனையில் அவர் மிக அடிக்கடி உணவருந்தியதுடன், என்னிடமிருந்து புத்தகங்கள் இரவில் வாங்கிக்கொள்ளுவார்.

### நகரசபையில் அங்கம்.

ஹிஸ்ஸாரில் நான் இருந்தகாலத்தில், கடைசி மூன்று ஆண்டுகளில், தேர்தல் மூலம், முனிஸிபல் கமிட்டியில் ஓர் அங்கத்தினனானேன்; அதற்குக் கௌரவக் காரியதரிசிப் பதவியும் பெற்றேன். எந்தத் தொகுதிக்கு (வார்டுக்கு) நான் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டேனோ அந்தத் தொகுதியில், முக்கியமாக முகம்மதியரே வசித்துவந்தார்கள். அவர்கள் என்பெயரைப் பிரேரபிக்க ('ப்ரபோஸ்' செய்ய) உதவிக் கமிஷனரிடம் சென்ற பொழுது, அவர் அவர்களைக் கலைக்க முயன்றார். ஆனால், அவர்கள் பிடிவாதம் செய்துவிட்டார்கள்; நான்எதிர்ப்பின்றியே, கமிட்டிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டேன்.

### நகர்நலப் போராட்டம்.

இராணுவத்தளவாட இலாக்காவைச் சேர்ந்த ஆங்கில உத்தியோகஸ்தர் ஒருவர் அந்தக்கமிட்டியின் தலைவராயிருந்தார். அவர் மிகவும் பொல்லாதவரும் கொடிய வருமான மனிதர். நகர ஜனங்களுக்கு அவரிடம் வெறுப்பு உண்டாயிருந்தது. நான் ஜனங்கள் பக்கமாகப் பரிந்து, ஜனங்களின் உரிமைகளைப் பாதுகாத்ததால், நகர சபைத் தலைவரும் டெபுடி கமிஷனரும் எனது காரியங்களில் கண் வைத்து வந்தார்கள். கமிட்டியில் கஉ-இந்தியரும் ௩-ஐரோப்பியரும் இருந்தார்கள். நிற வேற்றுமைப் பிளவு ஏற்பட்டு, பனிரண்டு இந்தியரும் ஒரு கட்சியாகவும், மூன்று ஐரோப்பியரும் இன்னொரு கட்சியாகவும் நின்ற சந்தர்ப்பங்கள் பல முறை எழுந்தன. கல்வி, சுகாதாரம் ஆகிய விஷயங்களில் அபிவிருத்தியேற்பட நான் செய்த முயற்சிகளில், ஹிஸ்ஸாரில் மூன்று வருட நகரசபை வேலைக்காலத்தில், எனக்குக் கணிசமான அளவு வெற்றிகிடைத்தது. நகர சபைத்தலைவரின் தூண்டுதலின் மேல், ஓர் தலைமை உபாத்தியாயர் என்னிடம் பகைமை கொண்டார். ஆனால், அவர் அவமானப்பட வேண்டியதாயிற்று. நான் செய்த காரியத்தில், கல்வியிலாகாதார் ஏதும் தவறு காண முடியவில்லை; தலைமை உபாத்தியாயர் அவமானத்துடன் அவ்விடத்தை விட்டுச் செல்ல வேண்டியதாயிற்று. நகரத்திற்கு லெப்டினண்டு கவர்னர் விஜயம் செய்யவிருந்த ஒரு சமயம், வரவேற்புப் பத்திரம் சம்பந்தமாக, தலைவர் டெபுடி கமிஷனர் ஆகியவருக்கும் எங்களுக்கும் கடுமையான அபிப்பிராய வேற்றுமைகள் உண்டாயின. பொதுஜனங்களின் குறைகளோ, விவாதத்துக்கிடமான பொதுவாழ்வு சம்பந்தமான விஷயங்களோ, வரவேற்புப் பத்திரத்தில் குறிக்கப்படக்கூடாதென்று அவர்கள் விரும்பினார்கள். வரவேற்புப் பத்திரத்தில் இவை குறிப்பிடப்பட வேண்டுமென்று நான் வற்புறுத்தினேன். இந்திய அங்கத்தினர் நான் கூறியதை ஏற்றார்கள். தலைவரும், டெபுடி கமிஷனரும் அவமானமடைந்தார்கள். வரவேற்புப் பத்திரம் உருது பாஷையில் தயாரிக்கப்பட்டது. கமிட்டியின் சார்பாக, அதை நான் படித்தேன். இராணுவ உத்தியோகஸ்தர், கொஞ்ச காலம் ஓய்வு (லீவு) எடுத்துக் கொண்டு சென்றார். இந்திய உறுப்பினரில் ஒருவரை, நாங்கள் தலைவராகத்தேர்ந்தெடுத்தோம். தலைவரின் தேர்தல், டெபுடி கமிஷனராலும் கமிஷனராலும் அங்கீகரிக்கப்பட வேண்டும்; உத்தியோகஸ்தரல்லாத ஒருவர் தலைவராக விரும்புவதை அவர்கள் கடுமையாக எதிர்ப்பரென்பது அங்கத்தினர்கட்குத் தெரியும்.

அந்த மூன்று வருஷங்களும், தங்கள் நகர சபை அலுவல்களில் மிகுந்த ஊக்கத்தை ஹிஸ்ஸார் ஜனங்களுக்கு உண்டாக்கிவிட்டன. ஹிஸ்ஸார் நகர சபையில் நான் செய்த வேலை ஓர் முன்னோடியின் வேலையாயிருக்குமென நான் நம்புகிறேன்.



### சோதிட ரகசியம்.

"மாருதி" என்ற மாதப் பத்திரிகைக்கு மூன்றுவதாண்டு பிறந்துவிட்டது. பலஜோதிட ரகசியங்கள் இதில் வெளியிடப்படுகிறது. இதுசமயம் "ஆயுர்தாய தர்ப்பணம்" என்ற திருத்தம் வெளிவருகிறது. உள்நாடு வருஷ சந்தா ரூ 3—0—0 வெளிநாடு 3—4—0 மாதிரி பிரதி இனம். இன்றே எழுதுங்கள்.

(3) மாருதி ஆபீஸ், திருத்தணி இந்தியா.

### அங்கும் இங்கும்.

#### அரசாங்க கடன்.

ஜூன் உஉ-ம் தேதி வரையில் அரசாங்க புதிய கடனுக்கு ஈஉ கோடி ரூபாய் அளிக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

* * *

#### பார்லிமெண்டு தலைவர்.

சென்ற பார்லிமெண்டில் தலைவராகவிருந்த காப்டன் பிட்ஸ்ராய் அவர்கள் ஏக மனதாக புதிய பார்லிமெண்டின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.

* * *

#### பட்டினி கிடக்கவில்லை.

ஓர் வயோதிகர் மீது தமது மோட்டார் வண்டி ஏறியதற்காக காந்தியடிகள் பட்டினி கிடக்கின்றார் என்று கூறப்பட்ட செய்திக்கு ஆதாரமில்லை எனத் தெரிகிறது.

* * *

#### தேசீயத் தொழிலிற்கு ஆதரவு.

திருச்சி தாலூகா போர்டார் அண்மையில் கூடிய கூட்டத்தில் தங்கள் ஆட்சியாலுட்பட்ட எல்லா ஸ்தாபனங்களிலும் சுதேச சாமான்களையே வாங்குவதென்று தீர்மானித்துள்ளார்கள். சென்ற வருடத்தில் நூல் நூற்கப் பயிற்சியளிக்கும் கஉ-பாடசாலைகள் தவிர கூடுதலாக ௬௦-பாடசாலைகளில் நூல் நூற்றல் சொல்லிக்கொடுக்க வேண்டுமென்றும் நாலாவது வகுப்பிற்கு மேற்பட்ட வகுப்புக்கள் உள்ள போர்டுபாடசாலைகள் யாவற்றிலும் நூற்றல் பயிற்றுவித்தல் வேண்டுமென்றும் முடிவு செய்திருக்கிறார்கள்..

* * *

#### மாளவையா பிரயாணம்.

சிறிது உடல்நலனற்றிருந்த பண்டித மாளவையா அவர்கள் தற்போது உடல் நலனடைந்து விட்டாரென்றும் ஜூலை ஈம் தேதிவரை பம்பாயில் தங்கியிருப்பாரென்றும் தெரிகிறது.

* * *

#### கரு லட்சம் நஷ்டம்!

பர்மாவிலுள்ள அக்யாபில் தொடர்பாகப் பெய்த பெரும் மழையால் பல கிராமங்கள் தண்ணீருக்குள்ளாயின என்றும், போக்குவரவுகள் தடைப்பட்டு விட்டனவென்றும் மொத்தம் பதினெந்துலட்சரூபாய்வரை நஷ்டம் ஏற்பட்டிருக்கிறதென்றும் தெரிகிறது.

---

(௨-ம் பக்கத் தொடர்ச்சி.)

ல்லை. இவ்வளவுவேற்றுமையற்று நம்முடன் உறவு கொண்டாடும் அவ்வுயர் பிறப்பாளர்களை நாம் தாக்குதலும் எதிர்த்தலும் நீதியாகுமா? அவர்களை நாம் ஆதரித்தல் வேண்டும். அவர்கள் ஆதரவையும் பெறுதல் வேண்டும். இத்துடன் எனது பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன். இனி, கடவுள் ஆராதனை விஷயத்தைக் கவனிப்போம்."

பின்னர், கடவுள் ஆராதனை தொடங்கப் பெற்றது. கொசு குலத்தினர் அனைவரும் ஆனந்த பரவசத்தால் கூத்தாடினார்கள். தங்கட்கு இறைவனால் அளிக்கப்பட்ட இனிய குரலில் பாடினார்கள். பரிமளகந்தம் அமையப்பெற்ற அத்திவ்ய புஷ்கரணியில் அக்கொசுக்கள் யாவும் சென்று முழுகி, தங்கள் இறகுகளில் அப்புனித தீர்த்தத்தைக் கொண்டுபோய் சிவபெருமானுக்கு அபிஷேகம் செய்தார்கள். சந்தனம், ஜவ்வாது முதலியவற்றினும் சிறந்த மணமுளதாகதாங்கள் கருதுகின்ற மலத்தை எப்போதும் அணிந்துவருதால், அவற்றை பகவானுக்கும் அணிதல் அவசியம் எனக் கருதி அவ்வாறும் செய்தார்கள்! திரும்பவும் தங்கள் இனிய கீதத்தை அக்கொசுக்கள் பெரும் குதூகலத்துடன் பாடினார்கள். ஆராதனை முடிந்ததும் தங்கள்நன்றி அறிதலை நகர சபைகட்கு அறிவிக்கும் பொருட்டு, தென் இந்தியா கொசு மகாநாடு ஒன்று ஊருணிக் கரையிலேயே கூடிற்று. அந்நிகழ்ச்சி விபரம் பின்னர் அறிவிக்கப்படும்.

---

#### வைத்திய சோதனை.

வங்காள அரசாங்கத்தை உட்பட்ட எல்லா பாடசாலைகளிலும் டாக்டர் நியமித்து அவர் மாணவர்களின் உடல் நிலை முதலியவற்றைக்கவனித்து உடற்பயிற்சி ஆசிரியரோடு ஒத்துழைக்குமாறு செய்ய ஒரு திட்டம் தயாரிக்கப்படுகின்றதாம்.

* * *

#### மகாத்மா மோட்டார் விபத்து.

மகாத்மா காந்தியின் மோட்டார் ஏறியதால் காயமுண்டவர் ஓர் வயோதிகாரம், அவர் காந்தியடிகளின் பாத தரிசனம் செய்யச் சென்றபோது மோட்டார் அவர்மீது ஏறியதென்றும் ஆதலால் தாமே அதற்கு ஜவாப்தாரி என்றும் தமது வாக்குமூலத்தில் கூறினாராம். அவர் ஜூன் உச-ம் தேதி மரணமடைந்தார் எனவும் தெரிகிறது.

* * *

#### விஷ ஜுர வல்லுனர்.

விஷ ஜுர சம்பந்தமாக பல அரிய ஆராய்ச்சிகள் செய்த சர் ரொனால்டு ராசுக்கு சமீபத்தில் ஓர் பொற்பதக்கம் பரிசளிக்கப்பட்டிருக்கிறதாம். அவருக்கு தற்போது எஉ வயதாகிறதென்றும் அவர் தமக்கு அளிக்கப்பட்ட பொற்பதக்கத்திற்குப் பதிலளிக்கும் சக்திகூட இல்லாது அத்துணை மெலிவுற்றிருக்கிறார் என்றும் சொல்லப்படுகிறது.

* * *

#### மீரத்து சதி வழக்கு.

மீரத் சதியாலோசனை வழக்கை வேறு இடத்திற்கு மாற்றுமாறு எதிர்தரப்பு வக்கீல்களான சின்ஹாவும், குப்தாவும் ஜூலை ஈ-ம் தேதி அலகபாத் ஹைக்கோர்ட்டில் மனுச்செய்துகொள்வார்களென்றும், பண்டித மோதிலால் நேரு அல்லது சர் டெஜ் பகதூர் சப்ரூ இதைப்பற்றி வாதிப்பார்களென்றும் தெரிகிறது.

* * *

#### இந்திய சட்டசபை.

இந்திய சட்டசபையின் அடுத்த கூட்டம் ஆகஸ்டு ஈ௦ அல்லது செப்டம்பர் உ-ம்தேதி ஆரம்பமாகி, பூஜாவிடுமுறைவரை ஒரு மாத காலம் நடைபெறும். இக்கூட்டத்தில் சாரதா இளமை மண மசோதா, ஹாஜி கடலோர போக்குவரவு மசோதா, சொத்து மாறுதல் சட்டத்திருத்த மசோதா, ஆகியன ஆலோசனைக்கு வரும் எனத் தெரிகிறது.

* * *

#### கடியாபட்டியில் தீ.

கடியாபட்டி சிவாலயத்தில் திருவிழா நடக்கும்போது பல கடைகள் அங்கே வந்திருந்தன. சென்ற செவ்வாய்க்கிழமை காலையில் திடீரென நெருப்புப் பிடித்ததால் இரண்டு அலுமீனியக் கடைகட்கு பெரும் நஷ்டம் ஏற்பட்டது. பாத்திரங்கள் உருகிப்போய் விட்டனவாம். மொத்தம் ரூ. ௫௦௦௦ நஷ்டம் ஏற்பட்டிருக்கலாம் என்று சொல்லப்படுகிறது.

* * *

#### ஜார்ஜ் இளவரசருக்கு வைசிராய் பதவி.

லண்டன் நகரில் நடந்த ராயல் பூகோள சங்கத்தாரால் நடாத்தப்பெற்ற விருந்திற்கு ஜார்ஜ் இளவரசர் சென்றிருந்தாராம். அப்போது சர் பிரான்ஸிஸ் யங் ஹஸ்பெண்ட் பேசுகையில் ஜார்ஜ் இளவரசர் ஒருகாலத்து இராஜப்பிரதிநிதியாக வரக்கூடுமென்று தாம் நம்புவதாகவும், அப்பதவி அவருக்குக் கிடைக்குமானால் தமது செல்வாக்கை திபேத் லாமாவிடம் உபயோகித்து எவரஸ்டு சிகரத்தைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் உதவுவார் என்று நம்புவதாகவும் கூறினாராம்.

#### ஆயுதச் சட்ட ரத்து.

இந்திய சட்டசபையின் அடுத்த கூட்டத்தில் ஆயுதச் சட்டத்தை ரத்து செய்ய வேண்டுமென ஓர் தீர்மானம் தாம் கொண்டு வரப்போவதாக திரு. ஜம்னாதாஸ் மேத்தா பம்பாய் கார்ப்பொரேஷன் கூட்டத்தில் கூறினாராம்.

* * *

#### ஆகாச டெலிபோன்.

அமெரிக்காவிலுள்ள நியூயார்க்கு ராய்ட்டர் காரியாலயத்திலுள்ள ஓர் உத்தியோகஸ்தர் விமானத்தில் ஏறி அது உ௦௦௦ அடி பறக்கும் போது ஆகாச டெலிபோன் மூலம் லண்டன் ராய்ட்டர் தலைமை காரியாலயத்திலுள்ள ஒரு உத்தியோகஸ்தரிடம் பேசினாராம்.

* * *

#### நாணயமாற்றம்.

இந்திய கவன்மெண்டார்கள் டெண்டர்கள் வரவழைத்து அதன் மூலம் சீமைக்குப் பணம் அனுப்பும் முறையினை நிறுத்திவிட்டார்கள். தற்போது பஜாரில் லாபமாகவிருக்கும் முறையில் தாங்களே கால நிலையை உத்தேசித்து ஸ்டர்லிங்,முன் டெண்டர்கள் வாங்கிய இடத்தில் வாங்க நிச்சயித்துள்ளார். கூடுதல் விபரம் இம்பீரியல் பாங்கியினின்றும் அறிந்துகொள்ளலாம்.

* * *

#### தீண்டாமை வழக்கு.

பிரஞ்சு எல்லைக்குட்பட்ட மாஹியில் ஓர் வணிகவகுப்பைச் சார்ந்தவன் சமீபமாக ஓர் புலையன் சென்றதற்காக அப்புலையன் அடிக்கப்பட்டானும். எனவே, அவ்வணிகன் மீது வழக்குத் தொடர்ந்ததில் ஒருமாத கடின காவலும் ௫௦ ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டதோடு ஐந்து வருடத்திற்கு நல்நடத்தை ஜாமீனும் கொடுக்கவேண்டுமென்று உத்தரவிடப்பட்டிருக்கிறது.

* * *

#### கூகூ-வயது சென்ற பெண் ஒட்டர்.

இங்கிலாந்தில் பெர்க்ஸ் என்ற இடத்தில் கூகூ-வயது சென்ற ஓர் பெண் ஒட்டர் இருக்கின்றாளாம். அவள் அரசியல் விஷயத்தில் அதிதீவிரமாக விருக்கின்றாளாம். கண்ணாடி இல்லாது வாசிக்கவும் தமது கடிதத்தை தாமே எழுதவும் முடிகிறதாம். ஒவ்வொருநாளும் தன் வீட்டிலிருந்து கால் மைல் தூரத்திலிருக்கும் கோவிலுக்கு அவள் நடந்துசெல்கின்றாளாம்.

* * *

#### முதல் இந்தியா ஆகாய விமானப் பிரயாணி.

வங்காளி பத்திரிகையின் ஆசிரியர் திரு. ஆர். எஸ். சர்மா ஜூலை எ-ம் தேதி காரச்சியிலின்று புறப்படும் ஆகாய விமானத்தில் ஐரோப்பாவிற்குப் பிரயாணமாவாராம். இவர்தான் முதன் முதல் ஆகாய விமானத்தில் ஐரோப்பா செல்லும் இந்தியராவர். அவர் இங்கிலாந்திலும் ஐரோப்பாவிலும் மூன்று வாரங்கள் தங்கிவிட்டு திரும்பும் விமானத்திலேயேஇந்தியாவுக்குவருவாராம்.

* * *

#### இரண்டுலட்சம் ரூபாய் மோசடி.

கல்கத்தாவில் பியாரிலால் பந்தியா என்ற நகை வியாபாரி, ஹரிச்சந்த காகர், புரண்சந்த பாந்தியா என்பவர்மீது உ லட்சம் ரூ. பெறுமானமுள்ள நகைகளை நம்பிக்கை மோசம் செய்ததாக ஒரு வழக்குத் தொடரப்பட்டிருக்கிறது. உ லட்சம் ரூ. பெறுமானமுள்ள ஒருபச்சை மரகதம்முதல் எதிரியால் திருட்டுத்தனமாக லண்டனுக்கு அனுப்பப்பட்டு பின்னர்இந்தியாவில்ஜெயப்பூரில் விற்கப்பட்டதாகவும் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது.

#### வங்காள சட்டசபைத் தலைவர்.

வங்காள சட்ட சபைத் தலைவர் பதவிக்கு சாந்தோஷ ராஜாவும் குமார சிவசேகரேஸ்வராயும் போட்டி போடுவதாகவும், ஆனால் சாந்தோஷ ராஜாவே பெரும்பாலும் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படுவாரென்றும் தெரிகிறது.

* * *

#### பகத்சிங், தத்தர் உண்ணாவிரதம்.

பகத்சிங்கும், தத்தரும் லாகூர் சிறையிலிருக்கின்றனர். அவர்கள் உண்ணாவிரதமிருக்க ஆரம்பித்து கரு நாட்களாகின்றனவாம். பகவத்சிங் ரயில்வே காவல் கூடத்திலும், தத்தர் சென்றால் ஜயிலிலும் இருக்கின்றார்கள். அவர் உணவு அருந்த மறுப்பதாயின் ஜெயில் அதிகாரிகள் பலவந்தமாக உணவு செலுத்த நிச்சயித்திருக்கிறார்கள் எனத் தெரிகிறது.

* * *

#### கல்கத்தா சுகாதாரம்.

கல்கத்தா நகர சுகாதாரம், ஆலாயத்தில் தொழிற்சாலைகளினின்று எழும் புகையினால் அதிகமாகப் பாதிக்கப்பட்டிருக்கின்றதென வங்காளப் புகைத்தொழில் விசாரணை கமிஷனின் அறிக்கையால் தெரிகிறது. வருடமொன்றுக்கு அ௦௦௦ பேர்கள் சுவாச சம்பந்தமான நோயால் இறப்பதாகவும், கைத்தொழிற் பிரதேசத்தில் ஆயிரத்திற்கு அ வீதமும் வீடுகள் உள்ள இடங்களில் கஎ வீதமும்இறப்பதாகவுந்தெரிகிறது.

* * *

#### துப்பாக்கி லைசென்சு பெற வசதி.

பம்பாய் கார்ப்பொரேஷனில் திரு ஜம்னாதாஸ் மேத்தா, கலவரத்தின்போது தற்காப்பிற்காகக் கைத்துப்பாக்கி வைத்துக் கொள்ள தாராளமாக லைசன்சு கொடுக்க வேண்டுமென்று கொண்டுவந்த தீர்மானம், சட்டமுறைக் கமிட்டிக்கனுப்ப முடிவு செய்யபட்டது. அதில் அரசாங்கத்தை இம்மாதிரி கேட்டுக்கொள்ளுதல் சரிதானாவென்றும், "லைசன்ஸ் பெறுதற்கு அதிக வசதிகளைக் கூறும்படிக்கும் அக்கமிட்டியிடம் கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கிறது.

* * *

#### கெல்லக் சமாதான உடன்படிக்கை.

கெல்லக் சமாதான உடன்படிக்கையை ஜப்பான் சக்கிரவர்த்தி தலைமையில் கூடிய பிரிவிக்கௌன்சிலும் அங்கீகரித்துவிட்டதாம். எனவே உடன்படிக்கையின் முதன் முதல் கையொப்பமிட்டகடு நாடுகளில் எல்லா நாடுகளும் இப்போது அந்த உடன்படிக்கையை அங்கீகரித்துவிட்டன. ஜப்பானிய நாட்டின் அங்கீகாரம் அரசாங்க முறையில் அனுப்பப்பட்டவுடன் இந்த உடன்படிக்கை ஊர்ஜிதமாகும் எனத் தெரிகிறது.

* * *

#### சைமன்கமிட்டியார் நிலை.

சைமன் கமிஷன் இந்தியக் கமிட்டித் தலைவரான சர் சங்கரன் நாயர் பிரீபிரஸ் லண்டன் நிருபரிடம் கூறியவாலாற்றால், சைமன் கமிஷன் அறிக்கை விஷயமாக தங்களுக்கு ஒரு தகவலும் தெரியாதென்றும் அது சைமன் குழுவினர்களால் நேராகப்பார்லிமெண்டுக்கு அனுப்பப்படுமென்றும் தங்கள் கமிட்டியார் அறிக்கை வெளியிடு முன்னர் சைமன் கமிஷனரோடு கலந்து கொள்ளபடமாட்டாதென்றும், சாட்சிகள் யார் யார் விசாரிக்கப்படுவாரென்பது சைமன் குழுவினருக்கன்றி தங்களுக்குத் தெரியாதென்றும் கூறியிருக்கிறார். மேலும் இந்திய மத்திய கமிட்டி அறிக்கை வைசிராய் வழியாகவே சைமன் கமிஷனுக்கு அளிக்கப்படுமென்பதும் அவரது மொழிகளால் விளங்குகின்றது. ஜாயிண்டு பார்லமெண்டரி கமிட்டி விசாரணை காலத்தில் அவர் இங்கிலாந்தில் இருக்கப்போவதில்லை என்றும் அவர் கூறினர்.

## நகரத்தார்க்கு ஓர் அறிவிப்பு.

சிலோன் நாட்டுக்கோட்டைச் செட்டியார் அசோசியேஷன் காரியதரிசி பின் வருமாறு எழுதுகிறார்:— கொளும்பு ச. நா. ஐயர் கடைக்கு, இந்நகரத்தார்களிடம் மற்ற ஊர்களிலிருந்தும், கொளும்பு நகரத்தார்களிடம் பணம் வாங்கும்படி வருகிற உண்டியல்களுக்கு, ச. நா. ஐயர் கடைக்காரர், ஷியார் கடையில் பணம் கொண்டுவந்து கட்டவேண்டுமென்று விரும்புகிறார்; இது இவ்வூர் வழக்கத்திற்கு மாறுபாடாயிருப்பதால் இவ்விடம் நகரத்தார்கள் "வழக்கப்படி அவரவர்கள் கடையில் வந்து உண்டியல்களுக்குப் பணம் வாங்கிப் போகவேண்டுமேயொழிய ஐயர் கடையில் கொண்டு போய்க் கொடுப்பதில்லை" என்று தீர்மானம் செய்திருக்கிறார்கள். இவ்விஷயத்தை, இந்தியாவிலுள்ள நகரத்தார்களும், மற்ற ஊர் நகரத்தார்களும், ஷியார் கடையில் உண்டியல் மாற்றுகிறவர்களும் தெரிந்து கொள்வதற்காக வெளியிட்டிருக்கிறோம்."

### மாதர் சங்கத்திற்கு நன்கொடை.

கிருஷ்ணா ஜில்லா போர்டின் புதிய தலைவர் மிர்ஜாபுரம் ஜமீன்தார் தனது மனைவி பேரால் ஒரு கட்டிடம் கட்ட பெசவாடா இந்திய மாதர் சங்கத்திற்கு ரூ. ௩000 நன்கொடை அளித்திருக்கிறாராம்.





## அறிவிப்பு.

இதனால் சகல ஜனங்களுக்கும் தெரிவிப்பதென்னவென்றால் எனது சிறிய தாயார் பேரன் 18 வயதுள்ள ராமய்யா என்பவன் என் பெயரைக் கொண்டும் பொய்க்கடிதங்களைக் கொண்டும் பல இடத்தில் ரூபாய் வாங்குவதாகத் தெரிகிறது. இந்த தேதி முதற்கொண்டு யாரேனும் அவனுக்குப் பணம் கொடுப்பார்களானால் நான் அக்கடன்களைத் தீர்க்க ஒப்புக்கொள்ள மாட்டேன் என்பதை பத்திரிகை மூலியமாய்த் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

மிருதங்கம், தெக்ஷிணாமூர்த்தி.
25—6—29. புதுக்கோட்டை.







## தந்தி.

பிணங்கு சுக்ல ஆனி கசு-௨

| | |
|---|---|
| உண்டியல் வட்டம் | நூற்று ஐம்பத்தைந்து |
| ஈயம் விலை | நூற்றுமூன்று |
| ரப்பர் விலை | நாற்பத்தேழு |

ரங்கூன் சுக்ல ஆனி க௯௨

| | |
|---|---|
| படகு நெல் | களஎ-அ-0 |
| ரயில் நெல் | கஎ௨-0-0 |
| பெரிய மில் அரிசி | சங-எ-அ-0 |
| சிறிய மில் | சருரு-0-0 |
| மீடன் (ஜூன்-ஜூலை) | சருஎ-அ-0 |
| ஆகஸ்டு | சசுஎ-அ-0 |
| வெளி விலைகள், | |
| ஜூன், ஜூலை | சஙசு-0-0 |
| ஆகஸ்டு | ச௨அ-0-0 |
| எஸ். கியூ. அரிசி | சஎ0-0-0 |
| பவுன் பழயது | கங-க௨-0 |
| ,, புதியது | கங-க0-சு |
| தவணை வட்டி | 0-கூ-சு |
| நடப்பு வட்டி | 0-க0-0 |

## கப்பல்.

ஏக்ராக்கப்பல் தற்போது சென்னையிலிருக்கிறது. இம்மாதம் ௨௨-ம் நாள் வெள்ளிக்கிழமை ரங்கூனுக்குப் பிரயாணமாகும்.

எதியோப்பியாக் கப்பல்நாளை (௨0-ம் தேதி) புதன்கிழமை சென்னை வந்து சேருகிறது. திரும்பவும் ௨௨-ம் தேதி வெள்ளிக்கிழமை பிணங்குக்குப் பிரயாணமாகும்.

ரோணாக்கப்பல் இம்மாதம் ௨௩-ம் தேதி மலேயாவிலிருந்து சென்னை வந்து சேரும்.



## கலப்பு விதவா விவாகம்.

### குமரன் ஆசிரியர் சொ. முருகப்பனார், மரகதவல்லியாரை மணந்தார்.

(ஒரு நிருபரிடமிருந்து)

சென்ற சனிக்கிழமை திருப்பரங்குன்றத்தில் காரைக்குடி 'குமரன்' ஆசிரியர் திரு. சொ. முருகப்பர் அவர்களுக்கும் பட்டுக்கோட்டை விஸ்வகர்ம வகுப்பைச் சேர்ந்த திருவளர் செல்வி, மரகதவல்லி அம்மாள் அவர்களுக்கும் சீர்திருத்த மணம் மிகச் சிறப்பாக நடைபெற்றது. குடியரசு ஆசிரியர் திரு. இராமசாமியார் தமது மனைவியாருடன் விஜயம் செய்து மணத்தை முடித்து வைத்தார். அவ்வமயம் பல ஊர்களிலிருந்தும் சுமார் நூற்றைம்பது அன்பர்கள் விஜயஞ் செய்திருந்தனர்.

திருப்பரங்குன்றம் சந்நிதி வீதியிலுள்ள கறுப்பணபிள்ளை அவர்களின் அழகிய மடத்தில் திருமணம் நிகழ்வுற்றது. சுமார் க0 மணிக்கே அன்பர்கள் அனைவரும் வந்து குழுமினர். கக-சரு-க்கு இராமசாமிப் பெரியார் தமது மனைவியாருடன் வந்து சேர்ந்தார். க௨-மணிக்கு மணவினை ஆரம்பமாயிற்று. இராமசாமிப் பெரியார் தம்பதிகளை அறிமுகப் படுத்தி, மணவினை நிகழ்த்துமாறு கேட்டுக் கொண்டார்.

மணமகனாகிய முருகப்பர் தமது வாழ்க்கைத் துணையாக மணமகளாகிய மரகதவல்லியை ஏற்றுக் கொள்வதாகவும் அவருக்கு உரிய சுதந்திரங்களை வழங்கி ஒன்றி இல்லறம் நடத்த ஒருப்படுவதாகவும் உறுதிகூறினார். அவ்வண்ணமே மணமகளாகிய மாரகதவல்லியும் உறுதியளித்தார். இருவரும் ஒருவரை யொருவர் மாலையிட்டுக் கொண்டு கணையாழி மாற்றிக் கொண்டனர். கரகோஷத்துடன் மணவினை எளிதில் சுருக்கமாக முடிவுற்றது.

அப்பால் திரு. இராமசாமியார் மணமக்களின் தைரியத்தையும் கொள்கையையும் போற்றி ஒரு நீண்ட சொற்பெருக்கு நிகழ்த்தினார். அதை ஆமோதித்து, திருவாளர்களான அழகிரிசாமி, சோமசுந்தர நாடார், பொ. திரிகூடசுந்தரன் ஆகியோர் பேசினர்.

அப்பால் திரு. பிச்சப்பா சுப்பிரமணியன் அவர்கள் மணமக்கள் சார்பாக வந்திருந்தாரனைவருக்கும் நன்றி கூறினார். சந்தன தாம்பூலாதிகள் வழங்கப்பெற்றவுடன், மணமக்களுடன் ஒரு குரூப் போட்டோ எடுக்கப் பெற்றது. உடனே இனிய உணவுடன் சமபந்தி போஜனம் நடைபெற்றது. அன்பர்கள் தத்தம் ஊரேகினர். அன்றிரவு மணமக்களும் அவர்களைச் சார்ந்தாரும் அமாராவதிபுதூருக்குப் பிரயாணமானார்.

மணமகன் தூய எளிய கதராடை புனைந்திருந்தார்; மணமகள் ஜப்பான் தேசத்துப் பச்சைப்பட்டுக் கட்டியிருந்தார். மணமகன் நாட்டுக்கோட்டை நகரவைசிய வகுப்பைச் சேர்ந்தவர்; மணமகள் விஸ்வப் பிராம்மண வகுப்பைச் சேர்ந்தவர். மணமகனுக்கு இது இரண்டாவது மணம்; அவருக்கு முதல் மனைவி இருக்கிறார். மணமகளுக்கும் இது இரண்டாவது மணந்தான்; ஆனால் அவர் முந்திய கணவர் காலஞ் சென்றுவிட்டார். மணமகனுக்குச் சுமார் ௩எ வயதும் மணமகளுக்குச் சுமார் ௨0 வயதும் இருக்கலாம். தனவணிக சமூகத்தில் முதன் முதல் விதவையை மணந்தவர் திரு. முருகப்பனார்தாம்.

## நோட்டீஸ்.

இதனால் சகலமானவர்களுக்கும் இராமனாதபுரம் ஜில்லா கல்லலிருக்கும் ரூம. வெ. சு. வெள்ளையப்ப செட்டியார் தெரிவிப்பதென்னவென்றால் என் தகப்பனார் லேட் ரூம. வெ. சு. சுப்பிரமணியஞ்செட்டியார் இறந்ததின் பிறகு நான் சிங்கப்பூர் ரூம. வெ. சு. வெள்ளையப்ப செட்டியார் பேருக்கு கடை வாங்கல் குடுக்கல் லேவா தேவிகள் கல்லல் மதுரை ஜில்லா மேலூர் கிராமம் நஞ்சை புஞ்சை வீடு சொத்துக்களையும் எங்கள் விலாசமுள்ள என் பேருவிருக்கப்பட்ட ரொக்க ரூபாய்களையும் என்னுடைய கையெழுத்து இல்லாமல் கொடுக்கப்படாதென்பதற்கு இதன் மூலம் தெரிவித்திருக்கிறேன்.

என் தாயார் நாச்சம்மை ஆச்சி சென்ற குமரன் மலர், கச-௨ பேப்பரில் என்னைபத்தி போட்டது சரியல்ல மேற்படி நாச்சம்மை ஆச்சிக்கு புத்திசுவாதீனமில்லாததினாலும் சிலர்கள் வார்த்தையை கேட்டு நடப்பதால் மேற்படி நாச்சம்மை ஆச்சிக்கு மேற்படி சொத்துக்களையும் ரொக்க லேவாதேவிகளையும் வாங்குவதற்கும் விற்று முதல் செய்வதற்கும் யாதொருவிதமான பாத்தியமில்லை.

ரூம. வெ. சு. வெள்ளையப்ப
செட்டியார்.
C-10. 1—7—29.

### வைசிராயின் வேலை.

முஸ்லீம் சட்ட சபை அங்கத்தினர்கள் சங்கப்பொதுக்காரியதரிசியாகிய ஜனாப் எ. எச். கஸ்னாவுக்கு வார்டு இர்வின் அனுப்பிய கடிதத்தில் தாம் இங்கிலாந்தில் சென்று செய்யப்போகும் வேலை இன்னதென்பதை குறிப்பிட்டிருக்கிறார். அதில்,

"இங்கிலாந்திலிருக்கும் போது பொது மக்கள் மனதைக் கலைத்துவரும் தற்கால பிரசினைகளை, எல்லா வகுப்புகட்கும் நியாயம் வழங்கக்கூடியதாயும், இந்தியாவிற்கு நிரந்தர நன்மை பயக்கக் கூடியதாயுமிருக்கின்ற முறையில் தீர்த்து வைக்கும் பரிகாரத்தைத் தேடுவேன்" என்று குறிப்பிட்டிருக்கிறார்.











காந்தியைப் போற்றிக் கதர் உடுத்துங்கள்.

மன்னவர் தமகரும் அஞ்சேன்
மாண்பெரும் நாட்டிற் காக
என்னுயிர் தனையும் ஈவேன்
எதற்குமியான் யாண்டும் அஞ்சேன்
பன்னரும் பாரதத்தாய்
பண்டைவாழ் வெய்தப் பாரில்
ஒன்னலர்க் கஞ்சா நல்ல
ஊழியம் தலைமேற் கொண்டேன்.

ஊழியன் காரைக்குடி
சுக்கில-ஸு ஆனி-மூ கக-உ

## அன்றும் இன்றும்.

சைமன் கமிஷன் நாடகத்தில் பற்பல விரும்பத்தகாத நிகழ்ச்சிகள், அதன் பிறப்பு முதல் இன்று வரை நடந்து கொண்டு வருகின்றன. இந்தியாவில் அது சுற்றித் திரிந்த இரண்டு முறையும் குருதி வெள்ளம் ஓடியது. வேண்டப்படாத விடத்தெல்லாம், சூழ்ச்சியாகவும் தந்திரமாகவும் நுழைக்கப்பட்டு, விசாரணை நாடகம் நடத்தப்பட்டது. இந்தியர் ஒத்துழைப்பதாக உலகிற்குக் காட்டுவதற்காக, பொருளற்ற கமிட்டிகள் அமைக்கப்பட்டன. அந்தக் கமிட்டிகள் அமைவதற்காக, ஸர் சைமனும், திரு. மாக்டொனல்டும் நித்திக்க, இச்சகம் பேசினர்கள். ஆனல், அவர்கள் இச்சகப் பேச்செல்லாம் என்னயின? எல்லாம் பொய்யாயின.

இந்தியச் சட்டசபைக் கமிட்டிக்குத் தமது கமிஷனுடன் சமமான அந்தஸ்து இருக்குமென்று, அப்பொழுது ஸர் ஸைமன் பகிரங்கமாக அறிவித்தார். இந்தியச் சட்டசபைக் கமிட்டியின் அறிக்கையும், தங்கள் அறிக்கையும் ஒரே காலத்தில் முறையே இந்தியச் சட்ட சபைக்கும், பார்லிமெண்டுக்கும் சமர்ப்பித்துக்கொள்ளப்படும் என்று உரைத்தார். சாட்சிகளை விசாரிப்பதில் சம உரிமை யிருக்கும் என்று பகன்றார். சுதந்திரமான கூட்டு மகாநாடு என்று, தமது கமிஷனையும், இந்தியச் சட்டசபைக் கமிட்டியையும் சேர்த்துப் பெயர் சூட்டினர். எல்லாம் உண்மையுடன் நடந்தனவா? இல்லை, இல்லை. இவை யாவும் வெறும் ஏமாற்றமே என்று இப்பொழுது உருசுவாகிவிட்டன.

இந்தியச் சட்டசபைக் கமிட்டிகள் அமைக்கப்படவேண்டுமென்பதற்காக, திரு. மாக்டொனல்டுதான் என்ன பாடு பட்டார்! என்ன நடிப்பு நடித்தார்!

"பிரதம மந்திரியின் அறிக்கையில் உபயோகிப்பட்ட சொற்கள் நமது கமிஷனுக்கும் இந்தியச் சட்டசபைக் கமிட்டிக்கும் இடையே உள்ள அந்தஸ்து, ஒருகமிஷனுக்கும் அதன் சாட்சிகளுக்கும் இடையே உள்ள அந்தஸ்தாகவிருக்கும் என்ற பொருளுக்கு இடந் தருமானல், அத்தகைய தோற்றத்தை உடனே நீக்கிவிட வேண்டுமென்று நாங்கள் மிகப் பலமாக யோசனை கூறினேம். இந்தியச் சட்டசபைக் கமிட்டி எழுத்து மூலமானதொரு அறிக்கையைத் தயாரித்துச் சமர்ப்பித்து, நமது கமிஷனுக்கு விடைகொடுத்தனுப்பி விடுமென்றும், நமது கமிஷனர் விசாரணைகளைச் செய்து தங்களுக்குத் தாங்களே விவாதங்களைப் புரிந்து ஆராய்வார்களென்றும், பின்னல் இந்தியச் சட்டசபைக் கமிட்டியாரை வரவழைத்துத் தங்கட்கெதிரே உட்காரவைத்து, அவர்களது சிபார்சுகளை விளக்குமாறு கேள்விகள் கேட்பார்களென்றும் நாம் நினைத்தலாகாது; கமிஷன் வெளியே செல்லும்பொழுது, இத்தகைய எண்ணங்கள் அதன் மனத்தும் ஒரு சிறிதும் இருத்தலாகாது. இது நமது உத்தேசமல்ல என்று நான் முற்றிலும் நிச்சயமாய்க் கருதுகிறேன்; இது நமது உத்தேசமல்ல என்பதைத் தெளிவு செய்துவிட வேண்டும்."

இவ்வாறு உரைத்தார் தற்பொழுதைய பிரதம மந்திரியான திரு. மாக்டொனல்டு.

ஆனல், தங்கள் உத்தேசம் என்ன வென்பதையும் அவர் கீழ் வருமாறு விளக்கினர்:—

"கீழ்வருவதேநமது உத்தேசமென்று நான் நம்புகிறேன். இந்த உத்தேசம் நிறைவேற்றப்படா விட்டா, இன்று நாம் நியமிக்கப்போகும் கமிஷன் சரியாக நடத்தப்பட்டால் உண்டாகக் கூடிய வெற்றி உண்டாகாதென்று நான் நிச்சயமாக நம்புகிறேன். இந்தியாவுக்குச் செல்ல வேண்டும்; நமது சகோதர அங்கத்தவரை இந்தியச் சட்ட சபை நியமிக்குமாறு செய்யவேண்டும்; அவர்களது வாக்குமூலங்களைப் பெறவேண்டும்; பரஸ்பரம் அவர்களும் நாமும் அபிப்பிராயங்களைப் பரிமாறிக் கொள்ள வேண்டும்; அவர்களுடன் ராஜிப் பேச்சுக்கள் நடத்த வேண்டும்—உண்மையைக் கூறப்போனல், ஒருகமிட்டியில் அமர்ந்துள்ள கனந்தங்கிய எதிர்க் (கன்ஸர்வடிவ்) கட்சி அங்கத்தவர் அந்தக் கமிட்டியில் அமர்ந்துள்ள கனந்தங்கிய இந்த(த்தொழிற்) கட்சி அங்கத்தவரை எவ்வாறு மதிப்பார்களோ அவ்வாறே அவர்களை (இந்தியச் சட்டசபைக் கமிட்டி அங்கத்தவரை) மதிக்கவேண்டும்; ஒரு கமிட்டி மிகச் சிறந்த யாதாஸ்தைத் தயாரிப்பதற்காக, தங்கள் பொது அனுபவத்தையும், பொது அறிவையும், பொதுக் கருத்துக்களையும் அவர்கள் உபயோகிப்பார்கள்."

மாக்டொனல்டு, தங்கள் உத்தேசமென்று விளக்கியது எவ்வளவு தெளிவாக இருக்கின்றது! இந்தியச் சட்டசபைக் கமிட்டியின் அங்கத்தவர்க்கு, சைமன் கமிஷனருடன் சம அந்தஸ்து இருக்குமென்றுதானே இதனின்றும் நினைக்கவேண்டியது? ஸர் ஸைமனும், மெழுகி மெழுகிப் பேசினரும், இதே பொருள்படத்தான் அப்பொழுது பேசினர் ஆனல், பின்னல், நடந்ததென்ன?

ஸர் சைமன் இந்தியாவில் இரண்டாம் முறை அடி வைத்தவுடனேயே இது பொய்யாய், வெறுங் கனவாய்ப் போய்விட்டது. சம அந்தஸ்துப் பகட்டு, வெளிப்பட்டுவிட்டது. அப்பொழுதே அநேகருக்கு அந்த மயக்கம் தீர்ந்துவிட்டது. பாலிமெண்டரிக் கமிட்டி என்ற பெயருங்கூட, இந்தியச் சட்டசபைக் கமிட்டிக்குச் சூட்ட, ராஜப்பிரதிநிதியவர்கள் இசையவில்லை. சாட்சிகளை விசாரிப்பதிலே, இந்தியச் சட்டசபைக் கமிட்டி அங்கத்தவர் பலரும் பொம்மைகளாகத்தான் இருக்கவேண்டியிருந்தது. எதில் சம அந்தஸ்து இருந்தது? சுருட்டுக் குடிப்பதில்தான் அந்த அந்தஸ்து இருந்தது.

இந்தியச் சட்டசபைக் கமிட்டியின் அறிக்கைக்கு, ஓர் சாட்சிய தஸ்தவேஜுக்கு உள்ள மதிப்புத்தான் இருக்குமென்று அன்றே நாம் எடுத்துக்காட்டினேம். ஆங்கிலே நாட்டிலே போய் அமர்ந்திருக்கும் இந்தியச் சட்டசபைக் கமிட்டிக்குத் தலைவரான, ஸர் சங்கரன் நாயர் இன்று அந்த அழுகையை அழுதுவிட்டார்! இந்தியாவின் பிரீபிரஸ்ஸுக்கு லண்டனிலுள்ள பிரதிநிதி, ஸர் சங்கரன் நாயரைப் பேட்டி கண்டு பேசியுள்ளார்.

ஸர் சங்கரன் நாயர் கூறிய விஷயங்கள் தாமென்ன? சைமன் கமிஷனின் அபிப்பிராயங்கள் யாவையென, இந்தியக் கமிட்டியாருக்குச் சிறிதும் தெரியாது; சைமன் கமிஷனருக்கு, இந்தியக் கமிட்டியார் தங்கள் அபிப்பிராயங்களைத் தெரிவித்தார்களேயொழிய, அவர்கள் இவர்களுக்கு யாதும் தெரிவித்தார்களில்லை; அரசருக்கும், மந்திரி சபையாருக்கும், பார்லிமெண்டுக்கும் தங்கள் யாதாஸ்தை அனுப்பிக்கொள்ளுவதே தங்கள் கடமையென சைமன் கமிஷனர் நினைத்திருக்கிறார்கள்; இந்தியச் சட்டசபைக் கமிட்டியார் தங்கள் யாதாஸ்தைத் தயாரிக்கு முன்னர் வட்ட மேஜை மகாநாடு கூட்டப்படலாமென்று, ஸர் சங்கரன் நாயர் கருதவில்லை; கமிஷன் முன் சாட்சியங்கள் கொடுக்க, சாட்சிகளையெல்லாம் ஸர் சைமனே பொறுக்கியெடுத்தார்; ஒரு சாட்சியைக்கூட இந்தியக் கமிட்டி, பொறுக்கியெடுக்க வேயில்லை; இந்தியச் சட்டசபைக் கமிட்டியார் தங்கள் யாதாஸ்தை வைசிராய்க்கு அனுப்பிக்கொள்ளுவார்கள்; அதை அவர் சைமன் கமிஷனுக்கு அனுப்பிவிடுவார்—இத்தச் சங்கதிகள் ஸர் சங்கரன் நாயரால், பிரீபிரஸ் பிரதிநிதிக்குத் தெரிவிக்கப்பட்டிருக்கின்றன.

சங்கரன் நாயர் வெளியிட்ட மேற்குறித்த மர்மங்களின்மேல், பிரீபிரஸ்ஸின் லண்டன் அதிபர், ஸர் ஜான் சைமனை ஓர் அறிக்கை வெளியிடுமாறு கேட்டுக்கொண்டார். முடியாதென்று ஸர் சைமனின் அந்தரங்கக் காரியதரிசியின் பதில் கிடைத்தது. ஸர் சைமனின் மனச்சாட்சி எங்கே? தாம் அன்று நித்திக்கச் சொல்லிய சொற்களின் கதியென்ன? அன்று சொன்னதற்கும், இன்று நடந்துகொள்ளுவதற்கும் சம்பந்தமேயில்லையே? ஸர் சங்கரரின் வெளியீடுகள் உண்மையென்று தானேஸைமனின் மௌனம் காட்டுகின்றது? இல்லையாயின், அவற்றைப் பகிரங்கமாக மறுப்பதற்கென்ன? இவை நடைமுறையைப்பற்றியனவேயாதலின், இவற்றுள் அரசாங்க அந்தரங்கங்கள் யாதுமில்லையே! சைமனின் வெட்கம், இந்தியரின் ஐயத்தை உறுதிப்படுத்துகின்றது. இன்னும் இந்தியர் பிரிட்டிஷ் இராஜ தந்திரத்தின் பொய்ம்மையை, ஜாலவேடிக்கையை உணர்ந்து கொள்ளாதிருப்பாராயின் பிரிட்டிஷாரின் அரசியல் நாணயத்தில் நம்பிக்கை வைப்பார்களாயின், அதைவிட இழிவு வேறொன்றுமிராது. சைமன் கமிஷன்—அது ஒரு மாயமான்!

## அழிக்குந் திட்டம்.

பொதுஜன அபிப்பிராயத்தை நல்வழியில் எழுப்புவது, பொதுஜனத் தொண்டர்களின் கடமை. ஜன சமூக வாழ்வில், பல சக்திகள் ஆதிக்கம் புரியும். பொதுஜன அபிப்பிராயம் அவற்றுள் ஒன்றாகும்; அறநீதி வேறொன்றாகும்; அரசாங்கம் மற்றொன்றாகும். பொதுஜன அபிப்பிராயம், எப்பொருள் குறித்தும், கருத்தைக் கலக்கிக் கடைந்து, பயனுள்ள வெண்ணெயைத் திரட்டுவது. அற நீதிகளைப் புகட்டவுள்ள சாதனங்கள், மனிதரது புனிதமான உணர்ச்சிகளைக் கவர்ந்து, அவற்றை வாழ்க்கையில் பூட்ட. அரசாங்கம், சட்டங்களைக் கொண்டு ஜனங்களின் அமைதியைப் பாதுகாத்து, முற்போக்குக்கு வசதி செய்யவாகும். இவற்றுள் ஒன்றின் அலுவலை மற்றெதுவும் செய்தல் இயலாது. வன்மைகொண்ட பொதுஜன அபிப்பிராயம், தனி மனிதனது சிந்தனையை ஆட்டிவைக்கும். அறப்பிரசார நிலையங்கள், போதன சக்தி நிறைந்தவை. அரசாங்கம், நிர்வாக வேலையைக் கைக்கொண்டது.

சென்னை அரசாங்கம், தனது நிர்வாகக் கடமையை மறந்து, உபதேச வேலையைக் கைக்கொள்ள, மதுவிலக்கு விஷயத்தில், முன்வந்துள்ளது. மதுவிலக்கைச் சாதிக்க, அரசாங்கம் உபதேசம் செய்ய வேண்டியதில்லை. அதன் கடமை அதுவல்ல. உபதேசிகள்ஏராளமாயிருக்கிறார்கள்.பொதுஜன அபிப்பிராயம், மதுவிலக்குக்குப் பெரிதும் ஆதரவாய் நிற்கின்றது. பெரும்பாலும், ஜனங்கள் குடியின் தீமைகளை நன்கு உணர்ந்திருக்கிறார்கள். "நான் குடியன்" என்று பகிரங்கமாகச் சொல்லிக் கொள்ளத் தைரியமுள்ளவன் எவனும் இல்லை. ஏன்? பொதுஜன அபிப்பிராயம், அதற்கு அவ்வளவு விரோதமாக இருக்கின்றது.

பண்டைக்காலந் தொட்டே, குடியென்பது பெரிதும் கேவலமாக நமது நாட்டில் மதிக்கப்பட்டு வருகிறது. "கள்ளங் கொலை கட் பூலை காம"மென்று, பஞ்சமா பாதகங்களில் ஒன்றாக குடி நமது நாட்டில் கருதப்பட்டு வந்திருக்கிறது. நூல்களெல்லாம் குடியை ஓர் பாவமென்றே வழங்கிவருகின்றன. எனினும், குடி நமது நாட்டைச் சீரழித்து வருகிறது. இதன் காரணமென்ன?



பாவங்களுக் கெல்லாம் ஓர் கவர்ச்சியுண்டு. குடி ஒருவனை ஒருமுறை பிடித்துவிட்டால், அதை விட இவனுக்கு மனமுண்டானலும், அந்தப் பிசாசு இவனை விடாது. எவ்வளவுதான் அவனுக்கு உபதேசம் செய்தாலும், அவனது இதயத்தை உருக்கிவிட்டாலும், அவனை யறியாமலே அதில் அவன் வீழ்ந்து விடுகிறான். அந்தப் பாவக் கடலினின்றும் வெளியேற, அவனுக்குச் சக்தியிருப்பதில்லை. இது நித்திய அனுபவமாக இருக்கின்றது.

எனவே, குடியை ஒழிக்க என்ன செய்ய வேண்டும்? குடிக்க உள்ள வசதிகளை யெல்லாம் எவ்வளவுக் கெவ்வளவு குறைக்கிறோமோ அத்தனைக் கத்தனை அது குறையும். கள்ளுக் கட்டுவதையும், போதைவஸ்துக்களின் விற்பனையையும் எவ்வளவுக் கெவ்வளவு தடுத்துக் குறைத்துவிடுகிறோமோ அவ்வளவுக்களவு அது குறைந்து விடும். பொதுஜன அபிப்பிராயமும், அறப்பிரசார நிலையங்களும், இவற்றை எவ்வளவு குறைக்கமுடியும்? அன்பு கொண்டும், அனுதாபங்கொண்டும், இன்னுரைகொண்டும், நல்லுபதேசங் கொண்டும், ஒவ்வொருவரும் பக்கத்திலுள்ள நண்பரைக் குடியின் பிடியினின்றும் விடுவிக்கலாம். ஆனல், அரசாங்கத்திற்கு இதயம் கிடையாது. அது ஒரு இயந்திரம். எனவே, அது இந்த வேலைகட்கு ஏற்றதல்ல.

அரசாங்கம் நிர்வாக ரீதியில்தான் குடியை ஒழிக்க இயலும், முயல வேண்டும். ஆனல், சென்னை அரசாங்கத்தார், பிரசங்கமேடைகளில் ஏறவே முன்வந்திருக்கிறார்கள். சென்னை அரசாங்கத்தின் மதுவிலக்குத் திட்டம் குறித்த அறிக்கை யொன்று, இப்பொழுது வெளியிடப்பட்டிருக்கிறது. அதை நோக்க, காரியம் இயற்றுவதில் அதற்குச் சிறிதும் நோக்கமில்லை யென்றும், வெறும் படாடோபம் செய்யவே அது விரும்புகிறதென்றும் நன்கு விளங்குகின்றது.

சென்னை ராஜதானியில் குடியை இருபது ஆண்டுகளுக்குள் முற்றிலும் ஒழித்துவிடுவது சென்னை அரசாங்கத்தின் இலட்சியமாயிருக்க வேண்டுமென்று சென்னைச் சட்டசபையில் ஓர் தீர்மானம் நிறைவேறியது. இதன் மேல், கலால் ஆலோசனைக் கமிட்டியின் கூட்டத்தை அரசாங்கம் கூட்டி, அதன் சிபார்சுகளைப் பெற்றது. மதுவிலக்குப் பிரசாரம் செய்வதென அரசாங்கம் அதன்மேல் முடிவு செய்தது. சட்டசபையின் அனுமதியின் மேல் இதற்கென நான்கு லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டது. பிரசார வேலைக்கான மத்தியக் கமிட்டியும், காரியாலயமும், ஜில்லாக் கமிட்டிகளும் அமைக்க இப்பொழுது ஏற்பாடுகள் நடக்கின்றன. இதுதான் தற்பொழுது வெளியாயுள்ள அரசாங்க அறிக்கையின் சாரம்.

"பூரண மதுவிலக்கு" என்ற சொல்லோ, "இருபது ஆண்டுகளுக்குள்" என்ற கால எல்லையோ, அரசாங்கத் திட்டத்தில் விலக்கப்பட்டுவிட்டன. எனவே, மதுவிலக்கு வேலையில் அரசாங்கத்திற்கு நம்பிக்கையில்லை யென்பதும், அதை இயற்ற உண்மையான உத்தேசமில்லை யென்பதும் நன்கு புலனாகின்றன. நாலு லட்சம் ரூபாயைப் பிரசாரம் என்ற பெயரால் அரசாங்கம் செலவழிப்பதால், என்ன பயனுண்டாகும் என்பது நமக்குச் சிறிதும் விளங்கவில்லை.

கள்ளிறக்க அனுமதி யளிப்பதில் பின் வாங்காத அரசாங்கம், கள்ளுக் கடைகளைப் பெருவாரியாக ஏலம் போட வெட்கிக்காத அரசாங்கம், அந்த வருமானத்தைக் கல்வியுடன் பிணைக்கும் அரசாங்கம் பிரசாரம் புரியப் போகிறதாம்! இந்தப் பிரசாரத்தால் என்ன பயனுண்டாகும்? கட்குடியைக் கொஞ்சமாவது குறைக்க அரசாங்கம் உண்மையிலேயே மனம் கொள்ளுமானல், இந்த நாலு லட்சத்தை வீணுக்கிறைக்காமலே அவ்வாறு செய்ய வியலும். கள்ளுக்கடைகளைக் குறைக்கலாம்; அவற்றை ஊர்களுக்கு வெகு எட்ட வைக்கலாம்; விற்பனை நேரத்தைப் பெரிதும் கட்டுப்படுத்தலாம். கட்டுரைகள் எழுதவும், பிரசங்கம் செய்யவும், அரசாங்கம் தேவையில்லை. அதன் வேலை, இவையல்ல. அரசாங்கத்தின் இந்தத்திட்டம் ஆக்குவதல்ல; அழிப்பதேயாகும்.

## ஊழியனுக்கு கக-வது வெற்றி

ஊழியன் கம்பெனியில் காரியஸ்தராகவிருந்து, கம்பெனி பணத்தைக் கையாடியதாகக் கண்டுபிடிக்கப் பெற்று வழக்குத்தொடரப் பட்டிருக்கும் தேவகோட்டை தே. வே. அருணசலன் செட்டியார் சம்பந்தப்பட்டு நடந்த பத்து கேசுகள் இதுவரை ஊழியன் கம்பெனிக்குவெற்றியாக முடிந்ததை அன்பர்கள் அறிவார்கள். பதினோராவதுவெற்றியாக சென்ற சனிக்கிழமை (உகூ-கூ-உகூ) யன்று தேவகோட்டை டிஸ்டிரிக்ட் முன்சீப் ஓர் தீர்ப்புக் கூறினர்.

ஊழியன் கம்பெனியில் ஷை டி. வி. அருணசலன் செட்டியார் காரியஸ்தராக விருந்தபொழுது, அவர் மைத்துனர் வீரப்பசெட்டியார் என்பவர் பெயரால் அச்சு வேலைகட்கு முன்பணமாக வாங்கியிருந்த ௫0-ம் சொச்சம் ரூபாயை கம்பெனிக்குக் கடன் கொடுத்ததாக அவர் மைத்துனரைக்கொண்டு கம்பெனிமீது கேசு போடச்செய்து அவர் சாட்சியும் கூறினர். ஊழியன் கம்பெனியின் சார்பாக, இது அச்சு வேலைக்கு அட்வான்சாக வாங்கிய பணமென்றும், அந்த அச்சுவேலைகட்கு இன்னும் பணம் பாக்கி வரவேண்டியதிருக்கிறதென்றும், ஆகையால் இவ்வழக்கு தள்ளுபடி செய்யவேண்டுமென்றும் விவாதிக்கப்பட்டது.

கம்பெனியாரின் எதிர்வாதத்தை ஏற்றுக்கொண்டு கேசு தள்ளுபடி செய்யப்பட்டது.

மானேஜிங் டைரக்டர்,
ஊழியன் கம்பெனி லிமிடெட்.

## இடிமுழக்கம்.

பின்பற்றத்தக்கன.

அண்மையில் கூடிய திருச்சி தாலூகா போர்டு கூட்டத்தில் பாராட்டத்தக்க சில தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. அவற்றுள் தாலூகா போர்டின் கீழுள்ள எல்லா ஸ்தாபனங்களிலும் சுதேச சாமான்களையே பெரும்பாலும் வாங்குதல், நான்காவது வகுப்பும் அதற்கு மேல் வகுப்புக்களுமுள்ள பாடசாலைகள் யாவற்றிலும் நூல் நூற்றல் கற்பித்தல், எனும் தீர்மானங்கள் குறிப்பிடத்தக்கவை. ஒவ்வொரு நாட்டினரும் விழிப்புற்று தங்கள் நாட்டுத் தொழில்களை விருத்தியுறச் செய்தும், தங்கள் நாட்டுப் பொருள் பிற நாடுகட்குச் செல்லாது தடுக்க அரும்பாடு பட்டும் இக்காலத்தில், இந்திய நாட்டினருள் பெரும்பாலோர் இன்னும் போதிய நாட்டன்பு அடையப் பெறாது, சமயச் சண்டைகளிலும் வகுப்பு வாதங்களிலும் தலையிட்டு வாழ்கின்றனர். தமது நாட்டில் செய்த சமான்கள் கிடையாதபோதே பிற நாட்டுச் சாமான்களை வாங்குதல் வேண்டும் என்று ஒவ்வொரு தேசத்தினரும் கருதி அவ்வாறே ஒழுகியும் வருகிறார்கள். ஆனல் நமது நாட்டினர் தங்கள் நாட்டுப் பொருள்களில் நாட்டம் செலுத்தாது பிற நாட்டுப் பொருள்களை வாங்கி, தமது கைப்பொருட்களை அயல் நாட்டினர் கையிற் கொடுத்து வறியோராய் வாழ்கின்றனர். நமது நாட்டுப் பொருள்களை என்று ஆதரிக்க நாம் முன் வருகின்றோமோ, மாய்ந்து போன கைத்தொழில்கள் யாவற்றையும் என்று புத்துயிர் பெற்றெழச்செய்கின்றோமோ அன்றே நாம் நமது வறுமைப் பிணியை அகற்றும் வழி காணுவோம். இக்காரணத்தால் காந்தியடிகளும், அவர் போன்ற நமது நாட்டுப் பெரியார்களும் பாரதமக்கள் அனைவரும் நூற்றல்வேண்டும், நமது நாட்டில் நூற்று நெய்த துணிகளையே அணிதல் வேண்டும், நமது நாட்டுப் பொருள்களை ஆதரித்தல் வேண்டும் என்று அறை கூவுகின்றார்கள். ஆனல், இவர்கள் உள்ளத்தினின்று எழும் இவ்வுரைகள் நமது நாட்டினிடையே மெதுவாக வேரூன்றிவருவதைக்காண நாம் மிக மகிழ்வெய்துகின்றோம். திருச்சி தாலூகா போர்டார் செய்த இத் தீர்மானங்களை நமது நாட்டிலுள்ள எல்லாத்தாலூகா போர்டார்களும், நகர சபையார்களும் பின்பற்றி அவற்றை நடைமுறையில் கொண்டு வருவார்களாயின் வறுமைப்பிணி நமது நாட்டைவிட்டு பறந்துவிடும் என்பதற்குச் சிறிதும் ஐயமில்லை. அத்தகைய நாள் விரைவில் வருமென எதிர்பார்க்கிறோம்.

### ஆதித்திராவிட இளைஞர் மகாநாடு.

நிகழும் சுக்கில ஆண்டு ஆடித் திங்கள் முதல் வாரத்தில் இராமநாதபுரம் ஜில்லா முதலாவது ஆதித்திராவிட இளைஞர் மகாநாடு சிராவயலில் கூட்டுவிக்க நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. அதற்கு சென்னை திராவிடன் ஆசிரியர் திருமிகு. சனக சங்கர கண்ணப்பர் அவர்கள் தலைமை வகிக்க இசைந்துள்ளார். வைக்கம் வீரர் உயர்திரு. ஈ. வெ. இராமசாமிப் பெரியார் அவர்களும் ஏனைய பார்ப்பனரல்லாதார் தலைவர்களும் விஜயம் செய்வார்கள். இம் மகாநாடு பற்றிய கடிதங்களும், நன்கொடைகளும் திரு. ப. சீவானந்தன், காந்தி நிலையம், சிராவயல், ராமநாதபுரம் ஜில்லா என்ற விலாசத்திற்கு அனுப்பும்படி கேட்டுக்கொள்ளுகிறோம் என்று வரவேற்புக் கழகத்தார் தங்கள் முதலாவது அறிக்கையில் தெரிவிக்கிறார்கள்.

## உள்ளூர்.

| | |
|---|---|
| செய்கோன் வட்டம் | உ-அ0 |
| சிங்கப்பூர் வட்டம் | உ-௪-0 |
| பினங்கு வட்டம் | உ-0-0 |
| கொழும்பு வட்டம் | 0-௯0-0 |
| சென்னை வட்டம் | 0-உ-௬ |
| ஷை ஆனி-மீ் நடப்புவட்டி | |
| ஈப்போ வட்டம் | உ-௪-0 |
| ரங்கூன் உண்டியல் வட்டம் | 0-௯0-0 |
| பவுன் விலை | கஅ-௯0-0 |

பந்தய ஓட்டம்:—கலஉரிமைத் தொண்டர்சங்க ஆதரவில் சென்ற செவ்வாய்க்கிழமை மாலை ௫-மணிக்கு முன்னர் ஊழியனில் வெளியிட்டிருந்தபடி, மூன்று மைல் பந்தய ஓட்டம் நடந்தது. அப்போது பந்தயத்தில் கயி இளைஞர்கள் கலந்திருந்தார்கள். ஓட்டத்தில் ஊழியன் காரியாலய பில் கலெக்டர் சி. பெரி. சி. ஆண்டியப்பன் கஉ நிமிடத்தில் முதன்மையாக வந்ததால் முதற்பரிசு அளிக்கப்பட்டது. இரண்டாவதாக, தேவகோட்டை பி. செல்லத்துரையும் மூன்றாவதாக காரைக்குடி ஆ. முருகப்பனம்பலமும்வெற்றிபெற்றார்கள். பெருந்திரளான மக்கள் இந்நிகழ்ச்சியைக் காண வந்திருந்தனர்.

ஸ்ரீ கொப்புடையநாயகி வித்தியாசாலை:—இப்பாடசாலை மாணவர்களின் கூட்டமொன்று சென்ற ஞாயிற்றுக்கிழமை மாலை ௬-மணிக்கு திரு. த. மாணிக்கம் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அப்போது கல்வி எனும் பொருள்பற்றி ராம. திருஞானசம்பந்தன் என்ற மாணவன் பேசியதும், பல மாணவர்களும் என். ஜி. சாரதா பாய் என்ற மாணவியும் தங்கள் அபிப்பிராயத்தைக் கூறினார்கள் என்று ஷை வித்தியாசாலை ஆசிரியர் பெ. மாணிக்கவாசகம் அறிவிக்கிறார்.

முருகப்ப தம்பதியார்க்கு உபசாரம்:—நேற்று மாலை ௫-மணிக்கு காரைக்குடி வெற்றி விநாயகர் எலக்டிரிக் தியேட்டரில், குமரன் காரியாலயத்தாரால் அண்மையில் மணம் புரிந்துகொண்ட குமரன் ஆசிரியர் திருவாளர் சொ. முருகப்பர் அவர்களையும், திருவளர் செல்வி மரகதவல்லி அம்மாள் அவர்களையும் பாராட்டும் பொருட்டு ஓர் சிற்றுண்டி விருந்து நடத்தப்பட்டது. அத்தருணம் சுமார் நூறு கனவான்களும், சில பெண்மணிகளும் விஜயஞ் செய்திருந்தார்கள். முதலாவதாக வந்திருந்தவர்கள் யாவருக்கும் சிற்றுண்டி விருந்து அளிக்கப்பட்டது. பின்னர், முருகப்ப தம்பதிகள், குமரன், மீனம்பிகை அச்சுக்கூடத் தொழிலாளர்கள், உத்தியோகஸ்தர்கள் ஆகியோர் அடங்கிய ஓர் புகைப்படம் எடுக்கப்பட்டது. பிறகு கண்ணகி என்ற சிறுமி பாரதியாரின் கும்மிப்பாட்டு பாடியதும்,குமரன் காரியாலயத்தாரின் சார்பாக, மானேஜர் திருவாளர் அழ. அருணசலன் செட்டியார் அவர்கள் விருந்தினர்கட்கு வாழ்த்துக்கூறி ஓர் வெள்ளிக் கோப்பையும் புதுவருட குமரன் ஆண்டுமடலும் பரிசு அளித்து இருவர்களுக்கும் மாலையும் யணிந்தார். மீனம்பிகை அச்சுக்கூடத்தார்களால் இரண்டு கதர் கைக்குட்டைகளும் தாராசினிமா கம்பெனி மானேஜரால் ஓர் வெள்ளிக்கப்பும் பரிசு அளிக்கப்பட்டன.

தங்களுக்கு அளித்த விருந்துக்கு பதில் அளிக்கையில் ஸ்ரீமதி மரகதவல்லி முருகப்பா அவர்கள், தம்பால் காட்டிய அன்பிற்காக தாம் குமரன் காரியாலயத்தாரிடத்து பெரிதும்நன்றிசெலுத்துவதாகவும், தம்மால் இயன்ற அளவு சீர்திருத்தச் செயல்களில் ஆசிரியரோடு ஒத்துழைத்துத் தொண்டாற்ற விரும்புவதாகவும் சிறிதுநேரம் மிக அழகாகப் பேசினர்கள்.

இரண்டாவதாக, திரு. சொ. முருகப்பர் அவர்கள் தமது நன்றியைச் செலுத்தியதும், உதவி ஆசிரியர் திரு. ஆ. சுப்பையா அவர்கள் எல்லாருக்கும் நன்றி செலுத்தினர். கடைசியாக, தாராசினிமாக் கம்பெனியாரால் சதி அனசூயா என்ற சரித்திரம் காட்டப்பட்டதும் இரவு ௯-மணிக்கு "முருகப்ப தம்பதிகட்கு ஜே" "கலப்பு மணம் செழித்தோங்குக" என்ற பெருங் கோஷத்தினிடையே எல்லோரும் தமது இருப்பிடம் திரும்பினர்கள் என்று நமது நிருபர் அறிவிக்கிறார்.

# போர்டு காரின் விலை குறைந்துவிட்டது

| | |
|---|---|
| டூரிங் (Phaeton) | 2525-0-0 |
| ரோட்ஸ்டர் | 2525-0-0 |
| ஸெடான் (இரண்டுகதவுள்ளது) | 3050-0-0 |
| ¾-டன் கமர்ஷியல் சாஸிஸ் | 1850-0-0 |
| 1-டன் டிரக் சாஸிஸ் | 2445-0-0 |

சிக்கனம். நீண்ட உழைப்பு.

குறைந்த செலவில் மிகுந்த சுகமும், அமைப்பில் அடக்கமாகவும், மிகுந்த புழக்கத்துடன் கூடியதும் குளிர்ச்சி பொருந்திய வர்ணங்களோடு பார்வைக்கு அழகாகவும், கம்பீரமான தோற்றமும், மணிக்கு 55-மைல் முதல் 65-மைல் வரையில் ஓடக்கூடிய

கார்கள் **போர்டு** கார்களே.

கார் இலேசாகவும் ப்ரேக் அமைப்பு எளிதாகவும் இருப்பதால் எண்ணெய்ச்செலவு மிகவும் சொற்பம். டயர்கள் நீங்கள் எதிர்பார்ப்பதைவிட அதிகமாக உழைக்கின்றன.

கைபிடியும் பக்கக் கண்ணாடிகளும் உள்ளன.

லோகல் ஏஜண்டுகள்:—

டி. வி.

# சுந்தரமய்யங்கார் அண்டு சன்ஸ்

தலைமை ஆபீஸ்:— மதுரை. கிளை ஆபீஸ்:— காரைக்குடி.



நேப்பாள கஸ்தூரி
சூரியன் மார்க்
குங்குமப்பூ

நயமானது : : : : : விலை சகாயமானது.

மைசூர் ஜவுளி வர்த்தகசாலை
காரைக்குடி.

குரோம் தோல் — — — நடயன்கள்.

அழகானதாய் சகாயமான விலைக்குக் கிடைக்கும்.

ஏ.வி. அண்டு சன்ஸ்,
காரைக்குடி.

## நோட்டீஸ்.

தேவகோட்டை சப்கோர்ட்டில்

1929-ஸு O. S. No. 59.

1929-ஸு I. A. No s. 523 and 524.

1. கோட்டையூர் மெ. ருமு. ஆண்டியப்பனம்பலம்
2. ஷை யூர் வயி. ருமு. ருமசாமி அம்பலம்
} வாதிகள்

1. காரைக்குடியிலிருக்கும் கரு. மெ. மெய்யன் சேர்வை.
2. ஷை யூர் ஆ. மெய்யப்பனம்பலம்.
3. ஷை யூர் காரைக்குடி நாட்டார் ரிஸிவர் அவர்கள்.
} பிரதி வாதிகள்

இந்த நெம்பரில் கோட்டையூர் எட்டுக்கரை வல்லம்பர்களுக்குப் பாத்தியமானதும் ஷை யார்கள் அநுபவத்திலிருந்துவருகிறதுமான தாவா இடத்தையும் அதற்குஅடுத்து தெற்கேயுள்ளதும் காரக்குடிநாட்டார்களுக்கு பாத்தியமுள்ளதென்று சொல்லிக் கொள்ளுகிறதுமான இடத்தின் ஒரு பாகம் போல் L. C. A. F. B. $\frac{\text{16 and 17}}{\text{Sak}}$-ல் சர்வே கோர்ட்டாரால் செய்யப்பட்டிருக்கிற தீர்மானத்தை தாவா சொத்து சம்மந்தப்பட்டமட்டில் ரத்துச் செய்ய வேணுமாய் வாதிகளால் தங்களுக்காகவும் கோட்டையூர் எட்டுக்கரை வல்லம்பர்களுக்காகவும் வியாஜியம் செய்து ஷை நெம்பரில் ஷை கோட்டையூர் எட்டுக்கரை வல்லம்பர்களுக்காக வாதிகளையே ரெப்ரஸன்டேட்டிவ்ஸ்களாக அங்கீகரித்துக் கொண்டு கேசை மேல் நடத்த வேணுமாயும், காரைக்குடி நாட்டார்களுக்காக இந்த நெம்பர் 1, 2 பிரதிவாதிகளையே ரெப்ரஸன்டேட்டிவ்ஸ்களாக அங்கீகரித்துக் கொள்ள வேணுமாயும் முறையே 1929-ஸு I. A. நெ. 523 லும், 1929-ஸு I A. நெ. 524 லும் மனுக்கள் கொடுத்து அவைகளுக்கு 1929-ஸு ஜூலை-மீ 15-உ வாயிதா ஏற்பட்டிருக்கிறது.

M. G. Mukundaraja,

தேவகோட்டை } வாதிகள் வக்கீல்.
28—6—1929 }

C 9

# ராமநாதபுரம்.

ராமநாதபுரம் ஜில்லா போர்டின் ஓர் சாதாரணக்கூட்டம் ஜூன் ௨௦-ம் தேதிவியாழக்கிழமை காலை௯-மணிக்கு பழய சௌராஷ்டிர ஹைஸ்கூல் கட்டிடத்தில் அமைக்கப்பட்டிருக்கும் ஜில்லா போர்டு காரியாலயத்தில் கூடிற்று. அத்தருணம் தலைவர் திருவாளர் உ. ப. அ. சௌந்தரபாண்டிய நாடார் அவர்கள் தலைமை வகித்தார்கள். நிறைவேறிய தீர்மானங்களில் முக்கியமானவை வருமாறு:—

### பாதை சீர்திருத்தம்.

பார்த்திபனூர், பாமக்குடி, முத்துக்கலத்தூர் என்னும் ஊர்களிலுள்ள ரோட்டுகளும் பாதை சந்துகளும் செப்பனிட ஜில்லா போர்டு இஞ்சினீயர் திட்டப்படி ரூ ௫௦௭௫ அனுமதிக்கப்பட்டது.

### ராஜபாளயத்தில் நெசவுப்பயிற்சி.

திரு. ஆர். வி. இராமச்சந்திரன் பிள்ளை அவர்களால் கீழ்க் கண்ட தீர்மானம் கொண்டுவரப்பட்டது.

“இராஜ பாளையம் போர்டு ஹைஸ்கூலில் நெசவுத் தொழில் கற்பித்து வந்ததை, ௨௫-௫-௨௮ தேதி கூடிய போர்டு கூட்டத்தில் நிறுத்திவிடுவதென நிச்சயக்கப்பட்டிருப்பதாலும், அப்பயிற்சியின் அவசியத்தை மாணவர்களும் பொது மக்களும் விரும்புவதாலும், இவ்வகுப்பை நிறுத்துவதென நிச்சயிக்குமுன் அது பயனுடைத்தா அன்று என்பதை அறிவதற்குள்ள வசதிகள் ஒன்றும் கொடுக்கப்படவில்லையாதலாலும், நெசவு வகுப்பை அப்பாடசாலையில் திரும்பவும் ஏற்படுத்த வேண்டும் என்று இப் போர்டு தீர்மானிக்கிறது”

இத்தீர்மானத்தை பிரேரேபணை செய்யும் போது திரு பிள்ளை அவர்கள் இராஜபாளயம், நேசவுக்தொழிலிற்கே ஓர்.பேர் பெற்ற இடமென்றும், ஆதலால் நெசவுத்தொழிற் பயிற்சி மிகவும் அவசியமென்றும் ஆயிரத்திற்கு மேற்பட்ட கைத்தறிகள் உள்ள அவ்வூரில் இவ்வகுப்பு இருத்தல் வேண்டுமென்றும் வற்புறுத்திப் பேசினர். இவ்வகுப்பால் நன்மையுண்டா இல்லையா என்பதை அறியு முன்னரே அது நஷ்டத்திற்கு ஏதுவானதென்று திடீரென முடிவு செய்துவிட்டதற்கு மிகவும் வருந்துவதாகவும் குறிப்பிட்டார்.

இத்தீர்மானத்தை இராமநாதபுரம் ஜில்லா கலெக்டர் திரு மாக்வின் எதிர்த்துப்பேசுகையில், நாகரிக மிகுந்த இக்காலத்தில் குமஸ்தா வேலைகளையே இளைஞர்கள் பெரும்பாலும் விரும்புகிறார்களென்றும், நெசவுத் தொழிலாளவகுப்பைச் சார்ந்தவர்களல்லாதார் இதை நாடுவதில்லை என்றும் ஆதலால் அவ்வகுப்பு தேவை இல்லை என்றும் கூறினர். போர்டு உபதலைவர் ராவ் சாகிப் மாணிக்கவாசகம்பிள்ளை அவர்களும் தீர்மானத்தை எதிர்த்தார்.

ஆனல் தலைவர் தீர்மானத்தைத் தாங்கிப்பேசவே கடைசியில் அது நிறைவேறிற்று.

### காரியதரிசி நியமனம்.

போர்டின் ஆட்சியில் உட்பட்ட பல இலாகாக்களையும் மேற் பார்க்க தலைவருக்கு உதவியாக மாதம் ஒன்றுக்கு ரூ. ௨௫௦-௧௦-௩௦௦ சம்பளத்தில் ஓர் காரியதரிசி நியமிப்பதென்றும் அப்பதவி பென்ஷன் பெறக் கூடியதாகவிருக்க வேண்டுமென்றுமுள்ள சப் கமிட்டியார் தீர்மானம் அனுமதிக்கப்பட்டது. ஜில்லா போர்டு இஞ்சினீயருக்கும் அவரது ஆப்பீசு சிப்பந்திகட்கும் சம்பளம் கூட்டுவதென்றும் நிச்சயிக்கப்பட்டது.

### புதுப்பாதை.

இராமநாதபுரம் ஜில்லாவின் தென்கிழக்கு பாகத்தில்மறவர்கள் வசிக்கும்இடத்திற்குச் செல்ல வசதியளிக்கும்பொருட்டு ௫௦ மைல் தூரத்தில்ஓர்பாதை இடுவதென்றும் தீர்மானிக்கப்பட்டது.

இது சமயம் தவறுதீர்கள்!! கேட்க தவறுதீர்கள்!!!

## “ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்”

மெஷின்கள் யாவற்றிலும் உயர்ந்தது

மாடல் 202 ரூ. 850.

விலையுள்ள மெஷின்தான்.

இந்த மெஷின் தற்சமயம் எங்களுடைய புதிய

## கிராமபோன் காக்ஷிச்சாலையில்

பரீக்ஷார்த்தமாக பிளேட்டு வைத்துக் கேட்க தயாரிலிருக்கின்றது.

குறிப்பு:—இது தவிர, இன்னும் அநேக மாடல் மெஷின்களும் நூதனமான பிளேட்டுகளும் ஏராளமாக ஸ்டாக்கிலிருக்கின்றன.

## ஏ. வி. அண்டு சன்ஸ்,

அதிகாரம் பெற்ற வியாபாரிகள்.

காரைக்குடி.

இனிய சுவை — — — — அரியகுணம்.

உயர்ந்த தாதுபுஷ்டி.

ரோஜாப்பூகுல்கந்து

மைசூர் ஜவுளி வர்த்தகசாலை,
காரைக்குடி.

## விளம்பரம்.

ராமனுதபுரம் ஜில்லா திருப்பத்தூர் தாலூகா சிறுவயல் உள்க்கடை நாச்சியாபுரத்திலிருக்கும் கண. லெ. லெட்சுமணன் செட்டியார் இதனல் சகல ஜனங்களுக்கும் அறிவிப்பதாவது.

எனக்கு மூன்ருவது. குமாரனை 17 வயதுள்ள மைனர் ருமசாமி செட்டியார்றென்றவன் யேழு யெட்டு மாசமாய் சில துஷ்டர்களுடன் சேர்ந்து கொண்டு வீட்டுக்கு வருமலும் துன்மார்க்க நடவடிக்கைகளில் சேர்ந்து கொண்டும் யென்வார்த்தைக்கிக்கட்டுப்படாமலும் நேர்மையில்லாமலும் இருந்துவருவதாலும் ஷை யானிடமிருந்து யாதொரு பிரதி பிரயோசன மன்னியில் உண்டியல்களும் கோட்டு வகையரு தஸ்த்த வேஜுகளும் மோசமாய் யெழுதி வாங்கியிருப்பதாகத் தெரிகிறபடியாலும் ஷை யான் யென் குடும்பத்தில் கட்டுப்படாமல் ஷை துஷ்டர்களுடன் பல இடங்களில் சஞ்சரித்துக் கொண்டும் ஷை யார்கள் துர்ப்போதனைக்கு உள்பட்டு யென் வார்த்தைக் கட்டுப்படாமலும் ஷை யான் சுயபுத்தியில்லாதவனுயும் தன் செய்கைகளையும் அவைகளின் பிரயோசனத்தைத் தெரிந்து கொள்ளச் சக்தியற்றவனுயும் இருந்து வருகிருன் ஷை யானுக்குப் பாத்தியமுள்ள சொத்துக்கள் யாதொன்றுமில்லை யென்னிடமிருக்கும் யாவற்று சொத்துகளும் யென்னுடைய சுயார்ச்சித சொத்துகள் ஷை யானிடமிருந்து யெவ்வித தஸ்தாவேஜுகள் பிரும்சேரி கோட்டு வகையருவும் இதற்குமுன் யெழுதி வாங்கியிருந்தாலும் இனிமேல் யெழுதி வாங்கினலும் ஷை தஸ்த்தவேஜுகள் செல்லத்தக்கதல்லதென்றும் அவைகள் யென்னுடைய சொத்துக்களையும் யென்னையும் யென் குடும்பத்தாரையும் ஒருவிதத்திலும் கட்டுப்படுத்தாதென்றும் இதனல் யெல்லோருக்கும் அறிவிக்கிறேன்.

கண. லெ. லெட்சுமணன்செட்டியார்
15—6—29 நாச்சியாபுரம்
(C. 7.

## ஆணுக நடித்த பெண்.

சமீபத்தில் மேனாட்டில் ஒரு ஸ்திரீ வெகு காலம் புருஷன் போல் நடித்ததாகப் பத்திரிகைகளில் வெளிவந்த விவரங்களை நேயர்கள் கவனித்திருக்கலாம். இந்தியாவிலும் ஒரு முஸ்லீம் ஸ்திரீ புருஷனுக நடித்த வரலாறு இப்பொழுது தெரிய வந்திருக்கிறது. "சுதேசமித்திர" னிலுள்ளவாறு அது வருமாறு:—

### மணமும் ஓட்டமும்.

இந்தப் பெண்ணை இவளுடைய கக-வயதில் இவளுடைய பிதா கொல்லு வேலை செய்யும் ஒருவருக்கு விவாகம் செய்து கொடுத்தார். கணவன் மனைவியைத் தன்னுடைய ஊருக்கு இட்டுப் போனான். அவ்விடத்து வாழ்வு இந்தப் பெண்ணுக்குப் பிடிக்கவில்லை. அங்கு போய்ச் சேர்ந்த சு-ம்நாள் ஒரு பையனுடைய உடுப்புகளை அணிந்து கொண்டு வெளியேறிவிட்டாள். இவள் போஸ்டனுக்குச் சென்று அங்கு கமால் என்னும் பெயருடன் ஆட்டிடையத் தொழிலமர்ந்தாள். இந்த வேலையில் ச, ரு மாதகாலமிருந்துவிட்டு மூல்டான் போய்ச் சேர்ந்தாள். அங்கு ஒரு எல்லைப்புர ஜாதியினரிடம் வேலைக்கு அமர்ந்தாள். இவ்விதமாகச் சிறிது காலஞ் சென்றுவிட்டதால், இனித் தன்னைக் கணவன் கண்டு பிடிப்பதற்கு மார்க்கமில்லையென்ற நம்பிக்கையின் பேரில் ஒரு கண்டிராக்ரிடம் கழுதை ஓட்டும் வேலையில் அமர்ந்தாள்.

ககூOசு-ம் வருஷத்தில் இவள் ஹார்னாய்க்கு அந்த கண்டிராக்டருடன் வந்தாள், அவர் எடுத்துக் கொண்டிருந்த காண்டிராக்டு வேலை முடிந்து போனதும் கூர்மியென்னுமிடத்தில் ஒரு காந்தாரவாசியிடம் வேலைக்கமர்ந்தாள். அவனிடத்தில் இரண்டு வருஷகாலம் வேலை செய்துவிட்டு ஹார்னாயில் மற்றொரு கண்டிராக்டரிடம் வேலைக்கமர்ந்தாள்.

### அவளுக்கு ஒரு மனைவி!

தனது எஜமானனுக்குச் சாமான்கள் வாங்குவதற்காக விபி என்னுமிடத்திற்குச் சென்றிருந்த போது தனது முதல் எஜமானனுடைய மனைவியைச் சந்தித்தாள். அவளை அவருடைய புருஷன் விலக்கு செய்திருந்தான். அந்த ஸ்திரீ கமால் என்னும் புருஷனாக நடிக்கும் இவளை விவாகம் செய்து கொள்ளப் பிரியப்பட்டாள். தன்னுடைய மர்மத்தை வெளியிட்டுவிட இஷ்டப்படாமல், இவள் அவளை மணக்க இசைந்தாள். இருவரும் ஹார்னாய்க்கு வந்து சேர்ந்து வசித்தனர்.

அந்தப் பக்கத்திலிருந்த ஒருவர் கமால் என்னும் பெயருடைய தன்னுடைய பிள்ளையை வெகு நாளாகக் காணாமல் தேடிக் கொண்டிருந்தார். கமால் என்னுமொருவன் (ஒருத்தி) தனித்து வசிப்பதைக் கேள்விப்பட்டு, அவனே தன்பிள்ளையென்று பாத்தியதை கொண்டாடினார்.

### மனைவி வழக்கு.

இதற்கிடையில் சதிபதிகள் வாழ்க்கையைத் திருப்திகரமாக நடத்தி வந்தார்கள். எல்லைப்புரப்படையில் கமாலுக்குக் காலாள் உத்தியோகம் கிடைத்தது. இந்த வேலைக்காக அதிக நாள் வீட்டுக்கு வாராமல் வெளியிலேயே தங்க வேண்டியிருந்தது. அவ்விதம் ஒரு தடவை போயிருந்த சமயத்தில் "இவருடைய" மனைவி வேறொருவனுடன் ஓடிவிட்டாள்.

### ரயிலில் வீரம்.

இதற்கு க-வருஷத்திற்கப்பால் இவளுடைய மனைவியை இழுத்துப் போனவன் இறந்துவிட்டான். ஆதி மனைவி மீண்டும் வந்து சேர்ந்தாள். கககக-ம் வருஷத்தில் மாரிக்காலம் நடந்த காலத்தில் இந்தச்சம்பவம் நடந்தது. ஒரு நாள் கமால் ரயிலில் வேலை செய்துகொண்டிருக்கையில், வண்டி பாதையை விட்டிறங்கிவிட்டது. கொள்ளைக் கூட்டத்தினர் சுமார் சுOO பேர்கள் இந்த வண்டியைத் தாக்கி, வண்டியிலிருந்தவர்களைக் கொள்ளையிட்டனர்.

### வெளிப்பட்டது.

இவர்களுடன் போராடுகையில் கமாலுக்குக் காயமேற்பட்டுவிட்டது. இவளுடைய தலையில் பலத்த காயமேற்பட்டது; சரீரத்தில் கத்திக் காயமேற்பட்டது. இவளுடைய புஜத்தை எதிராளியின் கத்தி கிழிவிட்டது. இவளை சிகிச்சைக்காக ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போனார்கள். அங்குதான் இவள் ஸ்திரீயென்பது தெரியவந்தது.

யுத்த காலத்தில் செய்த ஊழியத்திற்காக இப்பொழுதும் இவளுக்கு மாதம் க-க்கு கக-ரூபாய் பென்ஷன் கிடைக்கின்றது. ஹார்னாய் என்னுமிடத்தில் இவள் ஒரு பிரபல ஸ்திரீயாக விளங்குகின்றாள்.







## உடனழைத்துச் செல்லல்.

பூனைக்கு யார் மணி கட்டுவது என்ற பிரச்னை தீர்ந்துவிட்டது. கானாடுகாத்தான் கொத்தமங்கலம் பத்தூர் ஜயங்கொண்ட காடு வல்லம்பர் மரபிலுதித்த கா. உ. சித. பழனியப்ப அம்பலகாரர் மகன் சிதம்பர அம்பலகாரர் இந்த வாரம் தம் இல்லக்கிழத்தியையும் உஇ வயது நிரம்பாத தனதருமைப் புதல்வியையும் இப்பர்மா மாண்டலே நகரத்திற்கு உடனழைத்து வந்திருக்கிறார். இது சில வைதிகமுடையவர்களிடையே பரபரப்பை உண்டுபண்ணியிருக்கிறது. ஆனால், வாலிபர்களிடையே புத்துணர்ச்சி ஏற்பட்டிருக்கின்றதென்றே சொல்லலாம்.

நிற்க, சிதம்பரனார் வீரச் செயல் போற்றத்தக்கது. கட்டுப்பாடு, கட்டுப்பாடு என்று கப்பலில் காலடியைக் கூட வைக்கப்படாதென்று நம் மாதர்களை அமிழ்த்தி வைத்து வேதாந்தம் பேசும் முதியவர்கள் இருக்கும் இக்காலத்தில், கட்டுப்பாடென்ற போலிக் கயிற்றைக்களைந்துவிட்டு, எத்தனையோ இடையூறு, தடங்கல்களையெல்லாம் பொருட்படுத்தாது அழைத்துவந்த இவரை ஓர் நல் வழிகாட்டி என்றே சொல்லவேண்டும். இதைப்பார்த்தாவது இனி நம் வாலிபர்கள் தம்மனைவியரை அழைத்து வருவார்களாக. மனைவியரை அழைத்து வராது, துர்க்காரியங்களில் பிரவேசித்துழலும் வாலிபர்கள் கணக்கிலடங்கார். இதனால், பொருட்சேதமும் ஏற்பட்டு, தேகபலமும் குன்றி, மனச்சோர்வுற்று, வாடி வதங்கித் தாய்நாடு சென்று விண்ணுலகடைபவரனந்தம். இதை அநுபவமுள்ள டாக்டர்கள் பால் நன்கு தெரிந்துகொள்ளலாம். பொதுவாக நம் வாலிபர்களனைவருக்குமே மனைவி மக்களை உடனழைத்துவர வேண்டுமென்ற உணர்ச்சி அதிகமாகவே தோன்றியிருக்கின்றது. ஆனால், முதலில் துணிந்து அழைத்து வருபவர் யார் என்பதுதான் இதுவரை யோசனையிலிருந்தது. இப்பொழுது நண்பர் சிதம்பரனார் செய்து காட்டிவிட்டார். சில நாளைக்கு முன் நண்பர் தேவகோட்டை அ. வெ. தியாகராஜா அவர்கள் அழைத்து வந்து வாலிபர்கள் முன் அரிய பெரிய உபந்யாசங்கள் நடத்திச் சென்றது இன்னும் நம் கண்முன் தோன்றி நிற்கின்றது. இவர்கள் அழைத்து வந்ததில் இப்பொழுது என்ன முழுகிப்போய் விட்டது? ஆசாரம் கெட்டுவிட்டதா? அவர்களைச் சாதியில் சேர்க்காது தள்ளிவிட்டனரா? மூட வழக்கங்களைக் களைந்தெறிந்துவிட்டு, மற்றத் தேயத்தாரைப்போல் நம் வாலிபர்களும் சீர்திருத்தத்தில் பிரவேசிக்க ஏன் தயங்கவேண்டும்? விலங்கினங்கள் கூட அரைக்கணமும் பிரிந்திருப்பதில்லை என்றால், ஆறறிவு படைத்த மனித வர்க்கமாகிய நமக்குச் சுகதுக்கத்தைக் கலந்தனுபவிக்கக்கூடிய பாத்தியமில்லையா?

பொதுவாக நம்மிந்தியா முழுதும் இந்த வழக்கமிருந்து அதை மாற்றுவதென்றால், முடியாத காரியம். இது அப்படியல்ல. வட இந்தியர்—தென்னிந்தியரிலும் ஒரு பகுதியரைத் தவிர மற்றவர்—கோடீசுவரர் முதல் கோவணாண்டி வரை தென் ஆபிரிக்கா பிஜி, செட்டால் முதலாய தீவுகளில் மனைவி மக்களுடன் வதிந்துவருகின்றனர். நம் தென்னிந்தியா அதிலும் செட்டிமார் நாட்டில் மட்டும் இக்கொடிய வழக்கம் எப்படிப்புகுந்ததோ தெரியவில்லை. ஆனால் அநேக வருடங்களுக்கு முன் போக்குவரத்துச் சாதனங்களேற்படாத காலத்து ஒரு தேசத்தை விடுத்து ஒரு தேசத்திற்கு மனைவி மக்களை அழைத்துச் சென்றதில்லை என்றது உண்மை. அந்தக்காலத்தில் எத்தனை ஆயிரம் மைலானாலும் படகிலே செல்ல வேண்டும். இப்பொழுதைப் போல் பஞ்சுமெத்தையாலாக்கப்பட்ட பஞ்சணைகளையுடைய பளிங்குக் கற்களைப் போல் வர்ணம் தீட்டப்பெற்ற மரக்கலன்கள் அக்காலத்திலில்லை. ஆகையால் பெண்களையோ குழந்தைகளையோ அழைத்துச் செல்வது முடியாத காரியம். இப்பொழுது எங்கு வேண்டுமானாலும் நினைத்தவுடன் செல்லலாம். சுOOO மைலை ஒரே நாளில்கடக்கலாம்; ஆகாய வீதியில் பிரயாணமாகலாம்; சூரியமண்டலமும் செல்லலாம் என்ற ஆராய்ச்சிகளும் நடக்கின்றன. சகல சாதனங்களும் அமைந்திருக்கும் இக்காலத்தில் மனைவி மக்களை உடனழைத்துச் செல்லப்படாதென்ற விஷயம் கொஞ்சமும் பொருத்தமாகாது. மூட வழக்கத்தின் நுனியில் அந்தரமாய்த் தொங்கிக் கொண்டு, ஆசாரம் கெட்டுப் போகுமென்று சொல்லும் முதியவர்கள் ஊன்றிக் கவனிக்க வேண்டும்.

நண்பர் சிதம்பரனார் மரபினர் பர்மா, மலேயா, சிலோன் முதலிய அந்நிய தேயங்களுத் தனவைசியர் ஆதரணையிலோ, சொந்த வியாபாரத்தின் நிமித்தமோ பல்லாயிரக் கணக்கானவர்கள் போந்து வதிந்து வருகின்றனர். இதுவரை எவரும் உடனழைத்துச் சென்றதில்லை. நண்பர் சிதம்பரனார்தான் முதன் முதல் இவ்வேலையைச் செய்தவராவர். அதோடு நில்லாமல் எல்லோரும் இப்படியே உடனழைத்து வர வேண்டுமென்பதைத் தன்னாலியன்ற அளவு பிரசாரமும் செய்து வருகிறார். சில வாலிபர்கள் கூடிய சீக்கிரம் அழைத்து வருவதாகவும் வாக்குறுதி செய்திருக்கின்றனர். இவர்கள் சமூகம் வீரம் நிறைந்த சமூகம். அநேக வாலிபர் இக்காரியத்தில் தலையிடுவார்கள் என்று நம்ப இடமேற்பட்டிருக்கிறது. ஆனால், வயது முதிர்ந்த சிலர் வழக்கமில்லாத வழக்கமென்று கண்டிக்கப் புறப்பட்டிருக்கின்றனர். ஆரம்பத்தில் கண்டித்தாலும் வர வர இந்நற்காரியங்களில் அவர்களும் ஒத்துழைப்பார்களென்றேதான் நினைக்க வேண்டியிருக்கின்றது.

—மூடவழக்கம் வேண்டாதான்.

[குறிப்பு:— இச் செய்திகண்டு, நாம் களிப்புறுகிறோம். அன்பர் திரு. அ. வெ. தியாகராஜா அவர்களின் உதாரணமும், திரு. சிதம்பரனார் அவர்களின் உதாரணமும் நமது இளைஞர்களால் பெரிதும் பின்பற்றப்படுமாக. அறிவுத் தெளிவுக்கும், வாழ்வின், சௌகரியங்களுக்கும் அர்த்தமற்ற வழக்கம் அடிபணிந்து தானாக வேண்டும்—ப. ர்., "ஊழியன்"]





## காங்கிரஸ் கமிட்டி எங்கே?

திரு. த. மீனாட்சிசுந்தரம் பின்வருமாறு எழுதுகிறார்:—

கசுஉசு-ம் வருஷத்தில் நடந்த தமிழ் மாகாண மகாநாட்டின் தீர்மானப்படி தனவணிகர் நாடும் அதனைச் சார்ந்த பாகங்களும் "காரைக்குடி ஜில்லா" என்ற பெயருடன் ஒரு தனி ஜில்லாவாகப் பிரிக்கப்பெற்றது நண்பர்களுக்கு ஞாபகமிருக்கலாம். மேற்கண்ட ஜில்லாவின் முதன் மகாநாடும் கசுஉ௭-ம் வருஷத்தில் பள்ளத்தூரில் ஈ. வெ. ராமசாமி நாயக்கரவர்கள் தலைமையில் கூடி, சில முக்கியமான அக்காலத்திற்குகந்த தீர்மானங்களைச் செய்ததுடன், சில அங்கத்தினர்களைக் கொண்ட ஒரு ஜில்லாக் கமிட்டியும் நிறுவப்பெற்றது. அக் கமிட்டியில் திரு. ராய. சொக்கலிங்கன் அவர்களும், திரு. ந. ச. கிருஷ்ணன் அவர்களும் முறையே தலைவராகவும் காரியதரிசியாகவும் தேர்ந்தெடுக்கப் பெற்றதுடன், நானும் திரு.சி.ராம. ராமநாதனவர்களும் (பள்ளத்தூர்), திரு அ. வெ. தியாகராஜா அவர்களும், மற்றொரு தனவணிகக் கனவானும் சபை உறுப்பினர்களாக அங்கம் பெறும் பாக்கியம் பெற்றோம். கமிட்டியின் கூட்டங்கள் ஏழு அல்லது எட்டு மாதங்கள் வரை ஒழுங்காகவே நடந்து வந்தன.

சிராவயல், தேவகோட்டை, பாகனேரி முதலிய இடங்களில் தக்க தலைவர்களைக் கொண்ட தாலுகாக் கமிட்டிகளும் நிறுவப்பெற்றன. பின்னர், "ஊழியன்" வழக்கும், திரு. ந. ச. கிருஷ்ணன் அவர்களின் "ஊழியனி" னின்று பிரிவும் ஒன்றுகத் தொடர்ந்தாற்போல் வந்தபடியால், கமிட்டியின் கூட்டங்கள் இனிது நடைபெறக்கூடவில்லை. பல நாள் வரை, இளங்குழவியாகிய காரைக்குடி ஜில்லாக் கமிட்டி செத்தொழிந்தது என்றே கருதினோம். ஆனால், சென்ற சென்னைக் காங்கிரஸ் எமது ஐயத்தைச் சிறிது விலக்கிற்று. சென்னைக் காங்கிரஸிற்குக் காரைக்குடி ஜில்லாவினின்றும் சில பிரதிநிதிகள் வந்திருக்கின்றார்கள் எனக் கேட்டு மகிழ்ந்தோம். நமது ஜில்லாவும் தேசீயப் போராட்டத்தில் பின்வாங்கவில்லை என்று மனமகிழ்ந்தோம். சென்னைக் காங்கிரஸிற்கு வந்திருந்த பிரதிநிதிகள் பொதுஜனங்களின் துணைகொண்டு நமது ஜில்லாவையும் உறக்கத்தினின்று எழுப்புவார்கள் என நம்பினோம். ஏனைய காங்கிரஸ் கமிட்டிகளைப்போல், இடையறு வேலையினால் நம் கமிட்டியும் நம்மிடையே புத்துயிர் தோன்றச் செய்யும் என்று கருதினோம். எமது எண்ணம் பகற் கனவாய் முடிந்தது.

சென்னைக் காங்கிரஸ் காலத்தில் நம் ஜில்லாவின் பெயரும் நமது ஜில்லாவின் பிரதிநிதிகள் என்பவர்களின் பெயரும் பத்திரிகைகளில் இடம்பெற்றனவே யொழியக் காங்கிரஸ் முடிந்தது முதல் நம் கமிட்டியின் பெயரையும் அங்கத்தினர்களின் பெயரையும் அறியக்கூடாத துர்த்தசை நம்மைப் பிடித்தது. பிற மாகாணங்களும் கமிட்டிகளும் தேசீயப் போராட்டத்தில் தத்தம் உடல் பொருள் ஆவி மூன்றையும் தத்தம் செய்யச் சித்தமாய் நின்று மார்தட்டும் இக்காலில் நம் ஜில்லாவின் பெயரும், நம் தலைவர்களின் பெயரும் வெளியில் தெரியாமல் இருப்பதன் காரணம் என்ன? நம்மிடையே தோன்றிய சுயராஜ்யதாகம் தணிந்துவிட்டதா? ஜனங்கள்ராமனாண்டாலென்ன, ராவணனாண்டாலென்ன என்ற நின்னை வேதாந்தம் பேசத் தொடங்கிவிட்டார்களா? நம்முடைய ரத்தத்தில் ஓடிக்கொண்டிருந்த தேசப்பற்று மறைந்துவிட்டதா? இல்லை! இல்லை!! சில தலைவர்களின் மனவேறுபாடும் ஜனங்களிடையே பிரசாரமின்மையுமே காரணங்கள். ராமநாதபுரம் ஜில்லாவினின்றும் "காரைக்குடி ஜில்லா" என்ற தனி ஜில்லா பிரிக்கப்பட்டதன் நோக்கம் தேசீயப் போராட்டத்தில் காரைக்குடி ஜில்லா வாசிகளும் தீவிரப் பங்கெடுத்துக்கொள்ள வேண்டுமென்பதே. அதன் கருத்தை அறிந்து செய்வன செய்தல் இச்ஜில்லா வாசிகளின் முதற்கடமை.

சென்றது செல்க. பம்பாயில் கூடிக் கலைந்த அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் மகாத்மா காந்தி அடிகளின் முயற்சியால் காங்கிரஸ் கமிட்டிகளைத் திருத்தியமைப்பது சம்பந்தமாக ஒரு தீர்மானம் நிறைவேறப் பெற்றிருப்பதை நண்பர்கள் அறிவார்கள். அத்தீர்மானத்தின் கருத்துப்படி காமும் நடக்கக் கடமைப்பட்டுள்ளோம்.

மகா நாடுகளுக்குப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதுடன் நின்று விடாமல் காரியத்திலும் கண்ணாயிருக்கவேண்டும். வேதாரண்யம் மகாநாடு முடிந்தவுடன் நீண்ட காலமாய் மறைந்து கிடக்கும் நம் ஜில்லா மகா நாட்டையும் கூட்டல் வேண்டும். தேசீயப் போராட்டத்தில் நம் ஜில்லாவும் முன்னணியில் நின்று வாகை சூடக் கடவுள் தோன்றாத் துணையாக நின்று அருள் பாலிப்பாராக!

கீழ்க்கண்ட வினாக்களுக்கு, தெரிந்தவர்கள் பத்திரிகை மூலமாகவாவது கடித மூலமாகவாவது தயை செய்து விடையிறுக்கும்படி வேண்டிக்கொள்கின்றேன்.

(க) தற்காலம் காரைக்குடி ஜில்லா காங்கிரஸ் கமிட்டி எங்கே இருக்கின்றது?

(உ) அதன் தலைவர், காரியதரிசி, அங்கத்தினர்களின் பெயர்களை அறிவிக்கக் கூடுமா?

(௩) ஏதேனும் உருவான வேலைகள் செய்யப்படுகின்றனவா?

# பயனற்ற பயணம்.

பண்டித மதன மோகன் மாளவையா தென் இந்தியாவில் சமூக சீர்திருத்த விஷயமாகச் செய்த சுற்றுப்பிரயாணத்தின் பயனைப்பற்றி திரு. ராம வர்மத்தம்பான் அவர்கள் எம். ஏ, எல். டி. ரிவோல்ட் பத்திரிகையில் எழுதியுள்ளார். அதன் சாரமாவது:—

சமீபத்தில் தென் இந்தியாவுக்கு விஜயம் செய்த பண்டித மாளவையாவின் பிரயாணம் முற்றும் தோல்வியாகவே முடிந்தது. இரண்டு மந்திரங்களைக் கூறுவதால் மட்டும் மக்கள் சமுதாயத்தைச் சீர்திருத்தி, தீண்டாமையை ஒழித்து, கிருஸ்துவர்களையும் முகம்மதியர்களையும் ஹிந்துக்களாக்கி விட முடியுமென்று அவர் எண்ணினார் போலும்! அவருக்கு வெற்றி யாதேனும் கிடைத்ததாக அவர் எண்ணியிருப்பாராயின், அது அயல் சமயம் புகுந்தாரிடையேயன்றி பிறரிடமன்று. நம் பூதிரி வகுப்பின் கொடிய வைதீகர்கள் மிகப் பொறுமையோடு அவர் வார்த்தைகளை கேட்டுக்கொண்டிருந்ததோடு, நீண்டகாலமாக பஜனம் செய்த பயனற்ற மந்திரங்களை கிளிப்பிள்ளைபோல் பாடிமாளவையாடண்டிதரின் பதிட்டையும் பெற்றனர். ஆனால், கோவில் பிரவேசமும் தீண்டாமை விலக்குப்பற்றி அவர் குறிப்பிட்டபோது இவ்வைதிகர்கள் மாறுபாடடையலாயினர். கோட்டயத்தில், தமது முதல் மந்திரமாகிய ராம நாமத்தை அவர் கூற முற்பட்டபோது மக்கள் பொறுமையற்று அமைதியிழந்தவர்களாயினர். வகுப்பு வேறுபாட்டையும், மத மாற்றத்தையும்—வேறு சமயங்களிலிருந்து இந்து மதத்தில் சேர்ந்தவர்களை எவ்வகுப்பில் சேர்த்துக்கொள்வது? அவர் விரும்பும் வகுப்பில் அவர்களைச் சேர்த்துக்கொள்ளுவதானால், இந்து மதத்திலேயே இருப்பவர்கள் அவர்கள் விருப்பப்படி ஏன் வேறு வகுப்பில் சேர்த்துக் கொள்ளக்கூடாது என்பது—பற்றிய கேள்வி அவருக்குபெருங்குழப்பத்தை விளைவித்தது. அவ்வாறு சம்மதிப்பின் பிறப்பினால் வகுப்பு வேறுபாடு உண்டு என்பது மாய்ந்துவிடும். பதிற்கூற தயங்கியபோதிலும் அவரது வயோதிகத் தன்மையும் தளர்ச்சியும் கருதி இதற்கு விடையளிக்க மக்கள் எவரும் வற்புறுத்தவில்லை. அவரிடத்துள்ள தங்கள் மதிப்பாலும், தாங்கள் ஒழுக்க முறை தவறாது ஒழுகவும், உயர் கல்வி பெற்று விளங்கவும் செய்தவர்களாக இருந்தாலும் அவரை தொந்தரவு செய்யாது விட்டுவிட்டனர்.

திரிச்சூரிலும் திருவனந்தபுரத்திலும் அவர் பேச்சு மதிப்போடு கேட்கப்பட்டது. இவற்றில் ஓர் இடத்தில் வகுப்பு, மக்களின் குணத்தின்பாற்பட்டதேயன்றி பிறப்பினால் வந்ததல்லவென்று கூறி பகவத் கீதையிலிருந்து வழக்கமாகக் கூறப்படும் சுலோகத்தையும் மேற்கோளாகக் காட்டினார். வகுப்புத் தொந்தரவுகளைப்பற்றி ஆராயுங்கால் இச்சுலோகத்தைக் கவனிப்பார் எவரும் இல்லை.

இவை யாவற்றுள்ளும், பிற்போக்கான சென்னை பண்டிதர்களோடு செய்த வாதத்தில் பண்டிதர்—பத்திரிகைச் செய்திகள் உண்மையாயின்—பெருந் தோல்வியுற்றார் என்பதே மிகவும் விசனிக்கத்தக்கது. தீண்டாமை விலக்கு, இந்து மதத்தில் பிற சமயிகளைச் சேர்த்தல், ஆலயப் பிரவேசம் முதலியன வேத சம்மதமானவையன்று என்பதை அவருக்கு சம்மதிக்க வேண்டியதாயிற்று. அவரது மேற்கோட்களெல்லாம் புறக்கணிக்கப்பட்டன. தங்கள் பஞ்சேந்திரிகளை, மறந்து தள்ளுபடி செய்த சில மந்திரங்களை உருப்போடுவதில் உபயோகித்துவரும் ஒரு சில பழம் பண்டிதர்கள் முன், திறமைவாய்ந்த சட்டவல்லுனரான பண்டித மாளவையா தலைகுனிந்தது மிகவும் வருந்தத்தக்கதே. வேத சம்மதமாயினும், இல்லாதிருப்பினும் இச்சீர்திருத்தங்கள் தற்போதைய நிலையில் மிகவும் அவசியம். அவற்றிற்கு சம்மதமில்லையாயின், புதிதாகச் சம்மதம் உண்டு பண்ண வேண்டும் என்று வற்புறுத்தும் வலிமை அவருக்கு இல்லாது போயிற்றெனத் தெரிகிறது. சுறுசுறுப்பாக வேலை செய்யும் பண்டித மாளவையாவிற்குமாறுதலின்றி இருக்கும் பழம்பண்டிதர்களிடத்து, காப்பி, தேயிலை, ஓவல்டின், கலர் சோடா, மோட்டார், ரயில், மின்சார விளக்குகள், போன்ற தற்கால நாகரிகத்திற்கு வேண்டும் பல்லாயிரக் கணக்கான சாமான்களும வேத சம்மதமானவைகளா என்று கேட்க இயலாதிபோனது விசனிக்கத்தக்கதே! வேதங்கள் எழுதியவர்கள் கனவிலும் கருதாதவற்றிற்கு வேதத்தில் அனுமதியில்லாது இருக்கலாம் அல்லது தடுக்கப்பட்டிருக்கலாம். நிற்க,

இப்பழய வழக்கங்களில் தொல்லை பயப்பனவற்றை அகற்றி முன்னேறும் எண்ணத்துடன் முயற்சிக்க சமூக சீர்திருத்தக்காரர்கள் ஆண்மையுடன் முன்வர வேண்டும். இன்றைய நாளில் இந்தியாவிலுள்ள பெரும் கெடுதல் ஒவ்வொரு வகுப்பாருக்கும் ஏனைய வகுப்பாரிடத்து நம்பிக்கையற்றுப் போனதேயாகும். ஆங்கில ஆட்சியின் கீழுள்ள நீண்டகால அடிமைத்தன்மையும், அவர்கள் மதவிஷயங்களில் நடுநிலைமை வகித்தல், மெதுவாகவும் தொடர்பாகவும் சமாதானத்தோடும் நடாத்தும் கொள்கையின் பயனாக ஏற்பட்ட வறுமை ஆகியன, தங்கள் ஆற்றலை இழக்கச்செய்து தங்களுக்குள் ஒற்றுமையுடன் வாழும் தன்மையை அழித்துவிட்டன. தற்போதே, மக்கள் தங்கள் கண்ணைத் திறந்து தாங்கள் பல சங்கிலிகளால் பிணைக்கப்பட்டிருக்கிறார்களென்பதை உணர்ந்து கொண்டார்கள். இதற்கு சீர்திருத்தக்காரர்கள் ஆண்மையோடு தலைகொடுக்க முன்வருவார்களாக.

வட இந்தியாவில் இந்து முஸ்லீம் சண்டையே பெரும் நோயாகவிருக்கின்றது. முகம்மதியரோடு சண்டையிட ஓர் இந்துப் போர் வகுப்பினரை தயார் செய்வதிலும, சுத்தி சங்கதன் இயக்கங்கள் தோற்றுவித்து மூசல்மான்கட்கு கோபமூட்டுவதிலும், இந்து முஸ்லீம்களிடை கலப்புமணமும் கலப்பு உணவும் நடைபெறச் செய்து இரு வகுப்பாரிடையும் ஒற்றுமையுண்டு பண்ணுதலேசிறப்புடைத்து. மசூதியும் ஆலயமும் இருசமயிகட்கும் ஒரே தன்மையதே, இருவருக்கும் அவற்றுட் செல்லும் உரிமையுண்டு, என்பதை ஏன்நிலைநாட்டுதலாகாது? தற்போதைய முஸ்லீம்களிற் பெரும்பான்மையோர் இந்துக்களின் சந்ததிகளாகவே இருப்பதால் தங்கள் முன்னோர்கள் சமயத்தை விட்டு பிரிந்ததற்கு வருந்தமாட்டார்கள். அக்பர் பெரியார் இந்து சமயத்தின் பாலுள்ள தமது அன்பையும் அனுதாபத்தையும் காட்டச் சிறிதும் பின் வாங்கவில்லை. சகிப்புத் தன்மையும் சமாதானமும், எதிர்ப்பும் பகைமையும்விட, சீர்திருத்த விஷயங்களில் பெரும் பயனளிக்கும். முகம்மதியருக்கும் கிருஸ்தவ இளைஞருக்கும், முகம்மதியருக்கும் பார்ப்பனப்பெண்கட்கும் மணம் நடைபெறுவதாகப் பத்திரிகைகள் அறிவிக்கின்றன. இத்தகைய சேர்க்கையால் ஒரு வித கெடுதல் இல்லை என்பதையும் நாம் கண்டுவருகின்றோம். மசூதிகளின் முன்பு சங்கீதம் வாசித்தல், பசுக்கொலை புரிதல் போன்ற அற்ப விஷயங்களில் ஒருவருக்கொருவர் கழுத்தை வெட்டிக்கொண்டு இறக்க எண்ணுதல் மிக வெட்கக்கேடானதென்பதை உணருங்காலம் அடுத்துளிட்டது. இத்தகைய அற்ப விஷயங்களில் தங்கள் வாளுட்களை வீணாக்கி, இரு வகுப்பினர்களையும் நசுக்கி அயலரசின் நுகத்தடியினின்று மீள முயலக் கருதாதிருப்பின், இன்றைய இந்து முஸ்லீம்களின் சந்ததிகள் இவர்களைப்பற்றி மிகக் கேவலமாக எண்ணுவார்கள். நாம் நமது சந்ததியார்கட்குத் தகுதியான முன்னோர்களே என்ற பெயருக்கு உரித்தானவர்களாகவிருக்க வேண்டும். பண்டித மாளவையாவும் மகாத்மா காந்தியும் சவுக்கத்தலி முகம்மதலிகளோடு சேர்ந்து இந்திய நாட்டின் பல பாகங்களிலும் சுற்றுப்பிரயாணஞ் செய்து கலப்பு மணம், கலப்பு உணவு முதலியவற்றைப்பிரசாரம்செய்தும், இளைஞர்களைவகுப்புசமய வேறுபாடுகளின்றிமணம்புரியத்தூண்டவும் முற்படுவார்களாக. இச்செயலானது வகுப்புப் பிரதிநிதித்துவம் வேண்டும் என்பதற்காகவுள்ள சண்டையை ஒழித்து ஸ்வராஜ்யம் பெற முயற்சிக்க மக்களைத் தூண்டும். அப்போது இந்திய நாடு செல்வத்திலும், செயலிலும், ஆளிலும் மாவற்றிலும் செழிப்புற்று சிறந்து விளங்கும். இத்தகைய பொன்னுலகைப் பெற்றிட ஆற்றலும், நாட்டுப்பற்றும், அறிவும், பரந்த நோக்கமும் கொண்டு உழைக்க நமது தலைவர்கள் முன் வருவார்களா? இந்தியாவில் தோன்றியுள்ள எல்லா சமூகத் தொல்லைகட்கும் வகுப்புச் சண்டைகட்கும் கலப்பு மணமும் கலப்பு உணவுமே சிறந்த இரு கற்பகங்கள்.

---







# காம விபரீதம்.

(மகாத்மா காந்தி.)

பீஹார்கலாசாலைகளில் இயற்கைக்கு மாறான ஒழுக்கவீனம் இருக்கின்றதா என்ற விஷயங்குறித்து, சில ஆண்டுகளுக்கு முன் பீஹார் அரசாங்கத்தார் தங்கள் கல்வியிலாகாவில் ஓர் விசாரணை நடத்தினார்கள். உபாத்தியாயரிடையேகூட இந்த ஒழுக்கவீனம் இருப்பதாக, விசாரணை செய்த கமிட்டி கண்டு பிடித்தது. இயற்கைக்கு ஒத்ததல்லாத தங்களுடைய காமத்தைத் திருப்திசெய்து கொள்வதற்காக, உபாத்தியாயர்கள் மாணவரிடையே தங்கள் பதவியைத் துஷ்பிரயோசனம் செய்கிறார்கள். எந்த உபாத்தியாயரிடமாவது இந்த ஒழுக்கவீனம் இருப்பதாகக் காணின், இலாகாதார் அவர்மீது நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று, கல்வியிலாகா டைரக்டர் ஓர் சுற்றுத்திரவு பிறப்பித்தார். இந்தச் சுற்றுத்திரவு பிறப்பிக்கப்பட்டதனின்றும் ஏதேனும் பலன்கள் நிகழுமா என்பதையறிதல் உருசிகரமாயிருக்கும்.

ஏனைய மாகாணங்களிலிருந்தும் எனக்குக் கடிதங்கள் கிடைத்திருக்கின்றன இத்தகைய ஒழுக்கவீனம் இருப்பதை அவற்றில் என் கவனத்துக்குக் கொண்டுவந்துள்ளார்கள். இந்தியா முழுவதிலுமே, பொதுக்கலாசாலைகளிலும் அவ்வாறே சொந்தக் கலாசாலைகளும், இந்த ஒழுக்கவீனம் அதிகரித்துக்கொண்டே வருகின்றதென்றும்அவற்றால் விளங்குகின்றது.

இந்தத் தீயொழுக்கம் இயற்கைக்கு ஒத்ததல்லாததாயினும், இது அனாதிகாலந் தொட்டுப் பாம்பரையாக நமக்கு வந்திருக்கிறது. இரகசியத் தீயொழுக்கம் எதற்கும், பரிகாரம் காணுதல் மிகக் கடினமானதாகும். பையன்களுக்குப் பாதுகாவலாக விருக்கும் உபாத்தியாயர்களையே அது பீடித்து விடும்பொழுது, பரிகாரம் காணுதல் பின்னும் கடினமாகிவிடுகிறது. 'உப்பு தனது சுவையை இழந்துவிட்டால், எதைக்கொண்டு அதற்குக் கரிப்பு ஊட்டுவது?' உருசுவான விடங்களிலெல்லாம் இலாகாதார் நடவடிக்கையெடுத்துக்கொள்ளுதல், இதற்குப் பரிகாரமாகாது என்று நான் அபிப்பிராயப்படுகிறேன். பொதுஜன அபிப்பிராயத்தை உயர்த்துவிப்பதால் மாத்திரமே இந்தத் தீமையை எதிர்க்கவியலும். ஆனால், அநேக விஷயங்களில் திறமைவாய்ந்த பொதுஜன அபிப்பிராயம் என்ற சங்கதியே இந்நாட்டில் கிடையாது. அரசியல் வாழ்க்கையிலே திக்கற்ற உணர்ச்சி பரவியிருப்பதால், பிற எல்லாத் துறைகளையும் அது பாதித்துள்ளது. ஆகலால், நம் கண் முன்னே இழைக்கப்படும் அநேகம் பிழைகளை நாம் சாய்ப்பாய் விட்டு விடுகிறோம்.

இலக்கிய அறிவைப் புகட்டுவதை மாத்திரம் அவசியமாகக் கொண்டிருக்கும்கல்விமுறை, இத்தீமையை ஒழிக்க ஏற்றதல்ல, இது மட்டிலுமல்ல; உண்மையிலே இதனை வளரவும் செய்து விடுகிறது. பொதுக்கலாசாலைகளுக்குச் செல்லுமுன் சுத்தமாகவிருந்தபையன்கள் அவர்களது பள்ளிப் படிப்பு முடிந்ததும், அசுத்தர்களாகவும், கோழைகளாகவும், பலவீனர்களாகவும் மாறிவிட்டதாகக் கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. 'பையன்களின் மனத்திலே மதத்தினிடம் மதிப்பைப் புகட்டவேண்டும்'என்று பீகார்க் கமிட்டி சிபார்சு செய்துளது. ஆனால், பூனைக்கு மணி கட்டுவதுயார்? மதத்தினிடம் மதிப்பை உபாத்தியாயர்கள் தான் போதிக்க முடியும். ஆனால், அவர்களுக்கே அது கிடையாது. ஆதலால், சரியான உபாத்தியாயர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டியதே விஷயம். ஆனால், சரியான உபாத்தியாயர்களைத் தேர்ந்தெடுப்பதாயின், இப்பொழுது கொடுக்கப்பட்டுவருவதை விட மிக அதிகமான சம்பளம் கொடுக்க வேண்டும்; அல்லது, உபாத்தியாயர் வேலையை ஓர் தொழிலாகச் செய்யாமல், ஓர் புனிதமான கடமையைச் செய்ய ஆயுள் பூராவும் ஈடுபடுத்துவதாக மாற்றிவிட வேண்டும். ரோமன் கதலிக்கரிடம் இன்றுங் கூட இது வழக்கத்திலிருந்து வருகிறது. நம்முடையதைப் போன்ற ஓர் ஏழை நாட்டில் முதலாவது குறிப்பிட்டது அசாத்தியம் என்பது வெள்ளிடை. சாத்தியமான ஓரேவழி இரண்டாவதேயென்று எனக்குத் தோன்றுகிறது. ஆனால், நாம் இருந்துவரும் அரசாங்க அமைப்பின் கீழ் அது நமக்குச் சாத்தியமாயில்லை. இந்த அரசாங்கத்தில் ஒவ்வொன்றுக்கும் ஒரு விலை யிருக்கிறது; அந்த விலை, உலகத்திலேயே மிகக்கிராக்கியானதாகவிருக்கிறது.

பொதுவாகப் பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளின் ஒழுக்க விஷயத்தில் சிரத்தை யெடுத்துக் கொள்ளாததால், இத்தீமையைச் சமாளித்தல் அதிகக் கடினமாகிவிட்டது. தங்கள் குழந்தைகளைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பிவிட்டால், அவர்களது கடமை தீர்ந்துவிடுகிறது இவ்வாறு நமக்குக் காணப்படும் தோற்றம் துக்கிக்கத்தாயிருக்கிறது. ஆனால், ஓரே ஒரு பரிகாரம் இருக்கிறது. என்று நம்பிக்கையிருக்கிறது. அது, சகல மானவரும் தூய்மை செய்து கொள்ளுதலே. தீமையின் அளவைக்கண்டு கலங்காமல், நாம் ஒவ்வொருவரும் நம்மால் இயன்றதையெல்லாம் செய்ய வேண்டும். சுற்றிலும் அருகேயுள்ளவர்களை எச்சரிக்கையுடன் கவனித்தல் வேண்டும். முதன் முதலாக, தன்னையே பரிசுத்தப்படுத்திக் கொள்ள வேண்டும். நாம் பிறமனிதர்களைப் போல் இல்லையென்று நாம் சந்தோஷித்துவிடலாகாது. இயற்கைக்கு ஒத்ததல்லாத தீயொழுக்கம், பிரத்தியேகமாக ஓரிடத்தில் மட்டும் உள்ளதல்ல. இது ஓரே நோயின் கடுமையான அடையாளமேயாகும். நமக்குள்ளே மாசு இருக்குமானால், காமத்தில் நாம் வீழ்ந்துகிடப்போமானால், நமது அயலிலுள்ளவரைச் சீர்திருத்த எதிர்பார்க்குமுன்னர் நம்மை நாமே சீர்திருத்திக் கொள்ள வேண்டும். பிறரைப் பற்றித் தீர்ப்புக் கூறுவது அதிகமாகவும், தனது இச்சைகளுக்கெல்லாம் இடங் கொடுத்தல் மிகுதியாகவும் இருக்கின்றது. இதன் பலனாக,தீயகோஷ்டி உண்டாகிவிடுகின்றது. இதன் உண்மையை உணர்ந்தவர்கள், இதனின்றும் வெளிப்பட்டுவிட வேண்டும். முன்னேற்றம் எளியதாயில்லாவிட்டாலும், அறிவுக் கொத்தவாறு சாத்தியமாகிவிடுகின்றது என்பதை அவர்கள் கண்டுகொள்வார்கள்.

—"இளமை இந்தியா."

---

Reg. No. 1509. (16 Pages.) Tel: "Oolian"

# ஊழியன்

SUBSCRIPTIONS:
Annual subscription Rs. 5
Half yearly " Rs. 3
Foreign, Annual " Rs. 6

ADVERTISEMENTS:
One inch, S. C, per insertion As 8
Court Notices, per inch Re 1
Long standing advertisements given concessions.

The "Oolian," a Nationalist Weekly.

Editor: Raya. Chockalingan.

Truth Persists. Service Shines.

Vol IX. Karaikudi—Tuesday, 2nd July, 1929. No. 41.

# 'சயன்'ஸும் மதமும்.

("பிரபுத்த பாரதா" ஆசிரியர் எழுதியுள்ளதொரு அரிய கட்டுரையின் இரசமான சில பகுதிகளைக் கீழே மொழி பெயர்த்தளிக்கிறோம்.)

களைப்பில்லாத ஆராய்ச்சியின்மூலம், உண்மை விளக்கமான பல தத்துவங்களை, 'சயன்ஸ்'(அதாவது விஞ்ஞானப் புலமை) திரட்டிவருகின்றது. இதனை மறுக்க முடியாது. வாழ்விலும் உண்மை விளக்கம் குறித்தும், புதியவகையானதொரு நோக்கத்தை, விஞ்ஞானப்புலமை கற்றுக் கொடுத்துளது. வாழ்வு குறித்தும், அதன் பூர்த்தி குறித்தும் புதிய கருத்துக்கள் மூளைத்துக்கொண்டிருக்கின்றன. இந்தப் புதிய வேட்கையையும், புதிய நோக்கையும் ஓர் மதமாக ஆக்கிவிட முடியுமா? அல்லது, மதத்தை இவற்றுடன் ஒப்புரவு செய்துவிடலாமா?

* * *

தற்கால விஞ்ஞானப் புலமை (சயன்ஸ்) விரோதமான தொரு நிலைமையில் பிறப்பெய்தி விட்டது துரதிர்ஷ்டமாகும். உண்மையிலே, அந்தக்காலத்தில் ஐரோப்பாவில் நிலவிய மத, சமய அபிப்பிராயத்துக்கு எதிர்ப்பாகவே, விஞ்ஞானப் புலமை எழுந்தது; மதத்தின் பிரம்மாண்டமான எதிர்ப்புக்கிடையே, அது முன்னேற்றமெய்த வேண்டியிருந்தது. துரதிர்ஷ்ட வசமான முறையில் வளர்க்கப்பட்ட ஒன்று, பிந்திய வாழ்வில் தயாளத்தோடு கூடிய இனிமையைக் காட்டுவது துர்லபம். இளமைப் பருவத்திய வெறுப்பு, பிற்கால சம்பத்திலும் கலந்திருக்கும்.

* * *

மனித வாழ்வினதும், தனி நபர்களதும் எல்லாவழிகளும் ஆர்வங்களும், விஞ்ஞான நோக்கில் அடங்கியிருக்கவில்லை. வாழ்வு முற்போக்கெய்திப் பூர்த்தியடையும் வழிகள், தருக்கத்துக்கும், விஞ்ஞான ஆராய்ச்சிக்கும் அடங்கியிருக்கவில்லை—அவை தருக்கத்துக்கு அப்பாற்பட்டவையாயிருக்கின்றன. விஞ்ஞானப் புலமை நோக்குவதுபோல, மனித இயல்பு அவ்வளவு நிர்ணயமானதாகவும் அறிவுத் தெளிவுக் கியைந்ததாகவும் இல்லை. இயற்கையின் ஒரு சிறு அம்சத்தையும் மனிதரது மனத்தின் வேலைகளையுமே, விஞ்ஞானப் புலமை (சயன்ஸ்) காட்டுகின்றது. மீதி அம்சங்கள் சம்பந்தப்பட்டமட்டில், விஞ்ஞானப் புலமை என்ன செய்தது? விஞ்ஞானப் புலமை அவற்றிற்கு இசைந்துபோகவில்லை. அதற்குப் பதிலாக, அவை தனக்கு ஏற்ப மாற்றங்கள் செய்துகொள்ள வேண்டுமென்று, அது வற்புறுத்தியது. எனினும், அது இயற்கைக்கு விரோதமாகும்.

* * *

மனிதன் முக்காற்பங்கு—அதற்கு மேலுமிருக்கலாம்—அறிவுத் தெளிவுக்கு மாறாகவும், காற்பங்கு அறிவுத்தெளிவுக் கிசைந்துமிருக்கின்றான். உண்மையின் மூலம் எவ்வளவோ அவ்வளவு, பிழையின் மூலமும் அவன் தனது வாழ்வைப் பூர்த்தி செய்துகொள்ளுகிறான். எண்ணிறந்த ஜீவர்களின் அனுபவங்களின் மூலம் எந்த உண்மையை நோக்கி மனிதன் முன்னேறிச் சென்றுகொண்டிருக்கின்றானோ அந்த உண்மை, விஞ்ஞானப் புலமை ரீதியாக அறிந்ததெனப்படும் உண்மையல்ல. இந்தப் பிரபஞ்சம் ஒளிகளும் நிழல்களும் கலந்த மிசிரமாகவிருக்கின்றது. ஒளியால் எவ்வளவோ அவ்வளவு நிழலாலும், வாழ்வு பயன் பெறுகிறது.

* * *

சித்திரக்கலையை உதாரணமாக எடுத்துக்கொள்ளுங்கள். தான் எடுத்துக்கொண்ட விஷயத்தின் விஞ்ஞான ரீதியான உண்மையைப்பற்றி, சித்திரக்கலை தொல்லைப்படுவதில்லை. அற்புதக் கற்பனைகள், மிக நொய்ந்த நிழல்கள், ஒன்றுமில்லா மனோ ராச்சியங்கள் ஆகியவை அதற்குப் போதும். எனினும், அதன் இலட்சியமும், மதிப்பிடும் அளவுக்கோலும், உயர்ந்தவையாயிருக்கின்றன. எனவே, அது மாண்புமிக்க சூட்சும உண்மைகளை வெளியிடுகின்றது; ஆன்மாவுக்கு மகத்தான திருப்தியை அளிக்கின்றது. ஆகலால், விஞ்ஞானப் புலமையை (சயன்ஸை) விட, சித்திரக்கலை (ஆர்ட்) வாழ்வுக்கு மிக நெருங்கிவருகிறது. இந்த உண்மையை விஞ்ஞானப் புலமை அங்கிகரித்ததில்லை, அங்கிகரிக்கவில்லை. அது பிறவற்றை வம்புக்கிழுத்தது, வம்புக்கிழுக்கிறது.

* * *

பொருள்களைக் குறித்து நாம் பெற்றுள்ள ஞானத்தின் பெரும் பகுதியும், அவற்றால் நமது உணர்ச்சியிலுற்ற பிரதிச் செயல்களை ஆதாரமாகக் கொண்டதேயாகும். இது—முற்றிலும் இல்லாவிட்டாலும்—பெரும் பாலும் தன்னையே (அதாவது மனிதனது தன்மையையே) பொறுத்ததாயிருக்கின்றது. தன்னையே பொறுத்தான காரணங்களை, விஞ்ஞானப் புலமை கணித்துக்கொள்ளவில்லை, கணித்துக்கொள்ள வியலாது. விஞ்ஞானப் புலவரின் ஆராய்ச்சியறையினின்றும் வெளிவரும் பிரபஞ்சம், நாம் அறிந்துள்ள பிரபஞ்சத்தினின்றும் பெரிதும் மாறுபட்டதாயிருக்கின்றது. நமது உயர் இலட்சியத்திற் பெரும் பகுதியும், நமது தோற்றத்திற் படும் பிரபஞ்சத்தையே அஸ்திவாரமாகக் கொண்டுளது. ஆதலால், பிரபஞ்சத்தைக் குறித்த விஞ்ஞானப் புலமை வழியான அறிவு, தானாகவே, நமது உயரிலட்சியத்தையெல்லாம் கொன்றுவிடுகின்றது. சமுதாய வாழ்வு சம்பந்தமான பல மதிப்புக்கள் மறுதலடைய வேண்டியதாகும்; ஒழுக்க சம்பந்தமான மதிப்புக்களும் அவ்வாறே. வாழ்வைப்பற்றியும் நமது கடமைகளைக் குறித்தும், நாம் கொண்டுள கருத்தும், அவற்றிற்கேற்ப மாறுதல்கள் எய்தவேண்டும். மனிதனுக்கும் மனிதனுக்கும் இடையே இருந்துவரும் உறவுகள், சம்பிரதாய உணர்ச்சிகளின் ரீதியான மதிப்புக்களை ஆதாரமாகக் கொண்டு உயிர்த்திரா. வாழ்வுக்கு அஸ்திவாரம் எங்கே? சமுதாய, பொருளாதார, அரசியற் கருத்துக்கள் தாமாகவே மாறுதல் எய்த வேண்டியதே.

* * *

இந்த மாறுதல்களெல்லாம் உண்மையிலே ஏற்பட்டு விட்டன. பொருளாதார வாழ்வு, மதிப்பிட முடியாதபடி மாறிவிட்டது. சமுதாய வாழ்வும் அவ்வாறே மாறிவிட்டது. மனிதரது தொடர்புகளும் தப்பிவிடவில்லை. வாழ்வையும் கடமைகளையும் மேனாட்டவர் ஏற்கனவே எவ்வாறு கருதி வந்தார்களோ அவ்வாறு இப்பொழுது கருதவில்லை. வருங்காலம் எத்தகைத்தாயிருக்கும் என்று அவர்கள் செய்துகொள்ளும் கற்பனையுங்கூட, புலன்களுக்குப் புலப்படும் உலகாயத நோக்கிலேயே. அவர்கண் முன்னே எழும வருங்காலச் சித்திரம், அவர்களது ஆன்ம வாழ்வை ஆதாரமாகக்கொண்டது; ஆனால், இயற்கையின் மர்மங்கள் கண்டுபிடிக்கப்பட்டு, அவை மனிதரது புலன் இச்சைகளின் பூர்த்திக்குப் பயன் படுத்தப்பெறுவதன் பலனாக ஏற்படும் புற உலக மாறுதல்களையே அச்சித்திரம் சார்ந்திருக்கிறது.

* * *

பற்பல நாட்டு நாகரிகங்களுக்கும் பற்பல வகையான பூர்வ சரித்திரங்களிருக்கின்றன. அவற்றால், விஞ்ஞானப் புலமையின் செல்வாக்கில் வேற்றுமையிருக்கும். கடவுளும் ஆன்மாவும் பிற பாரமார்த்திக உண்மைகளும் இந்தியராகிய நமக்குத் தெளிவில்லாதவையல்ல. அவை, நமக்கு மிகத் தெளிவாகவும் மிக உண்மையாகவு மிருக்கின்றன. ஆகலால், விஞ்ஞானப் புலமை எவ்வளவு தாக்கினாலும், இவற்றில் நமக்குள்ள நம்பிக்கையை அசைக்க முடியாது. மனிதன் அறிவாராய்ச்சியால் நடத்தப்படவில்லை. நமது வாழ்விலும் மனத்திலும் எந்தச் சங்கதிகள் மிகவும் பதிகின்றனவோ அவற்றைக் கொண்டே நாம் வாழ்கிறோம். விஞ்ஞானப்புலமை எத்தனையே அற்புதங்களைச் சாதித்திருக்கிறது; அமிதமான சந்தேகத்தை உண்டாக்கியிருக்கிறது; என்றாலும், மேனாட்டவர் வாழ்விலே அது நாசம்புரிந்திருக்கிறது. மதம் இந்தியர் மனத்திலே எவ்வாறு பதிந்திருக்கிறதோ அவ்வாறு மேனாட்டவர் மனத்திற் பதிந்திருக்குமானால், விஞ்ஞானப் புலமை இந்த நாசத்தைப் புரிந்திராது. பாரமார்த்திக தத்துவங்களின் உண்மையை ஒப்புக்கொண்டால், விஞ்ஞானப் புலமை வேறுநோக்கில் காணப்படும். நோக்கிலே மாற்றம் ஏற்பட்டால், உண்மைகளின் மதிப்பிலே பெரும் மாற்றம் ஏற்படும்.

---

ராய. சொக்கலிங்கனால் காரைக்குடி "ஊழியன்" அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பெற்றது.

